கதிர் வெப்பத்தால் வேர் உண்டாகி நதி, ஆறு, ஓடை, மலை, கீழ்ப்பாகங்களில் படிந்து உருக்களாகி, உருவாக அமையப் பெற்று வழங்கும் உப்பு வகை 25 ஆகும். இதன் செயற்கை இரசாயன சரியை கிரியைகளால் மோக்ஷ பதமடையும் வரை குருவருள் புரிந்திட 'நவரத்தின சிந்தாமணி' நூல் செய்யுள் 800 பதம் போற்றுவோமாக.

244. நவ. ர. வை. சி.: ஈசனது விந்தாகிய காரம் பூமியினது சாரத்தின் சம்யோகத்தால் காரசார நஞ்சாக உதித்து ஐந்து பூதக் கலப்பால் உப்புச் சத்து அடங்கிய உவர் மண் படர்ந்து தை, மாசி, பங்குனி மாதங்களில் சூரியன் வெப்பக் கதிர்விந்து, பூமியாகிய புளி மண்ணில் பட்டு சந்திரனின் குளிர்கதிரால் கசிந்து உதித்து வந்திடுநாதம் இவைகளாகும்.

வி. வி. பஞ்ச பூதக் கலப்பினால் தான் உப்பு உற்பத்தியாகிறது. தேயு பூதமாகிய சூரிய வெப்பக்கதிர், பிரிதிவி அம்சமாகிய பூமி மண், அப்பு பூதமாகிய சந்திரனின் சீதக்கதிர் வாயு பூதத்தால் பூரித்து உருக்களாக அமைவது ஆகாய பூதம் வானிலிருந்து இணைந்து கலத்தல் சம்பந்தத்தினால் உப்பு உருவாகிறது. இந்த பஞ்ச பூத அம்சங்கள் கலந்து ரசாயன உரமாகி உருப் பெற தை, மாசி, பங்குனியில் சந்தர்ப்ப காலங்களாக, சிருட்டி இயற்கை அமையப் பெற்றிருக்கிறது. இந்த மாதங்களில் ஐம் பூதக் கலப்பில் கசிந்த பூநீர், காலம் செல்லச் செல்ல உப்பாக உருப்பெற்று ஆங்காங்கு கிடைக்கிறது.

## பூநீர் பற்றிய விவரம்

245. நவ. ர. வை. சி.: கார்மேக மதத்தினால் நஞ்சுத் தன்மை வாய்ந்த வெண் சாறல் விந்து ஜலமய

மான அமுரி ரசாயனத் தன்மை வாய்ந்த தண்ணீர் பொழிந்த வெண் சாறல், பூமியில் பனி மேவிய பசந்த புளிமண் கலப்பினுல், பூமிக் கசிவு நீர் தாயாகி, சூரியனின் கதிர்பட்டு, பூரித்து, பூர்க்கும் பூநீரெனும் ரசாயனப் பொருளாகும்.

246. செ.: பசந்த மண் ஜலக்கலப்பால் உவர்க்காரமேறி பனி விழுந்து பரவி நனைந்து கசிந்து இருக்கும். பக்குவத்தில் சூரியனின் கனல்பட்டு, பூவாக பூரித்து எழும்பும். வசந்த கால சந்திரனின் அருள் குளிர் மதக் கொழுப்பு நீர், மாசி மாதத்தில், வெகு காரத்தோடு உற்பத்தியாகும்.

பூநீர் சேகரிக்கும் கிரியையும் காலமும்

பூநீராவதும் பூதலந்தன்னிலும் சித்திரை
மாசி பங்குனி மூன்றினில்
காணிரோகத்திற் சந்திரனு விடில்
சோனை பாய்ந்து சுகாதீத நீறதாம்
பாணியோடி பருதிமுகம் பட
தானினி வெண்மை தாரணி தன்னிலும்
கோனினி பூமிநாத மெழும்பிடு
வேனினி விந்து நாதமீதாண்டையே 247

—ஞா. வெ. ப. 140 செய். 979

பூமிநாதம் பூநீறெனும் பேரதாம்
வாமியோகிகள் வந்து அந்நாளினில்
நேமமாக நெய்துவாகவும் பூமிசுற்றி
புனலடியாமலும், தாமே வேலிதனித்
துச்சொடித் துடனுமே சாணொரு
யர்ந்த மண்வெட்டியும்
நாமே சொன்ஞேம் நாளுக்குநாள் மூன்று 248
சோமன் விந்துநீர் சொல்லி யெரித்தடே



மூன்று நாளுமுனை தெரியாமலும் பூன்று
முச்சாண் பூநீர் விட்டெழும்பிடும்
வேன்று கம்பியது நீலவர்ணமும் தோன்று
நாலு தினத்தி லெறிந்திடும்
ஆண்டு பத்துமடுத்து கற்பங்கொளும்
நூண்டிடும் புளிசுன்னம் பூநீரதும்
மீன்றிடு பூமிநீர்க்கெதிரிலா யேன்றிடுங்
கரவித்தையி தாண்டையே 249

விருத்தம்

சாணுயரமண் கலந்து யெரித்துமேலும் தனித்து
அந்நாள் மறுநாள் கொண்டருணன் தன்னில்
காணுமொருயடி யொருசாண் வெட்டிமேலும்
கண்டுமொரு நாளதின் காலைதன்னில்
வேணுமந்தப்படி மூன்று நாளுஞ் செய்து
விளங்கவுமே நாலா நாளிதனைப் பார்க்க
மூன்று நாள் சென்றன் பின்கம்பியோடும்
முன்னுளில் மெரிலிட்டுப் பின்னுளாண்டே
250

பின் முன்னுள் கடைநாளு மெரியல்வேகம்
பேதித்திருகால் கொண்டு சதைந்து மேலாம்
உன்னிதமா மெரியலிடப் பூதான்பூர்க்கும்
ஒரங்குலப் பிரதான முயரமென்னில்
இன்னமினி நாலாநாள் கிளிஞ்சலாலும் எடுத்து
வெகுபதனமதாய் குப்பிக் கேற்றி
சொன்னகுரு நாலுமெழுகுபதமாயாட்டி
சூக்ஷமதாய்யைம்பதெரு புடத்தில் நீற்றே 251

—ஞா.வெ.ப. 140 செ. 983

247 ஞா.வெ. சித்திரை, மாசி, பங்குனி மாதங்களில், பூ மண்டலத்தில் சில ஸ்தலங்களில் சந்திரனின் சீதக் கதிராவி பட்டு "சேனை" சோனைகளாக அதிதமாக

ரசாயனக்கலப்பு நீர் கசிந்து ஓடும்போது சூரியக்கனல் தாக்குதலால் வெண்மை நிறமாக மாறி, பூமியின் உர சத்து நாதமாகி எழும்பி விடுகிறது. இது தான் பூநீர், பூமியும் நீரும் கலப்பால் விந்துநாதமிதுதான்.

248. பூமியின் நாதத்திற்குத்தான் பூநீர் என்று பெயர். ரசாயன விஞ்ஞானிகள், யோகிகள். இதற்குக் குறிப்பிட்ட அந்தக் கால நாள்களில், நேமமாக சிரத்தை, வேண்டிய சாதனங்களுடன் தயாராகி, பூநீர் உற்பத்தியாகுமிட மறிந்து, சுற்றிலும் வேலி கட்டி, வேறு தண்ணீர் வந்து கலந்து விடாமல் பாத்திகட்டி, சாண் உயரம் மண்வெட்டி சித்தப்படுத்திக் கொள்வார்கள். சந்திரனின் சீதக்கதிர் மண்ணில் விழுந்து நனைந்து படும்படி கிளறிக் கொண்டே பனிநீர் ஊறிப்போகும் வரை, நாளுக்குநாள் பதம் பார்த்து மூன்று நாள் கிளறிக்கொடுத்து பக்குவம் செய்து கொள்வார்கள். சோமன் விந்துநீர் நன்றாய் ஊறி படிந்துவிடும்படி செய்யலாகும்.

249. மூன்று நாள் வரை முளை தெரியாது. பின்னர் நாலாம் நாளிலிருந்து முச்சாண் உயரம் வரை நீல வர்ணக் கம்பிபோலெரிந்து எழும்பிவிடும். பத்து ஆண்டுகள் கற்பங் கொள்வதற்கு செய்து கொள்ள வேண்டி புளி சுன்னத்திற்கு வேண்டிய ரசாயன பூநீர் இதுவாகும். நிகரில்லாத ரசாயன பூமிநீர் எடுக்கவேண்டிய "கரவித்தை" செய்யும் கிரியையாகும்.

250. சோமன் பனிநீர் விழுந்த உவர் மண்ணை பின்னும் கிளறி சாண் வெட்டி மேலும் சூரியன் வெப்பக் கதிரில் எரித்து, மறுபடியும் இரவு பனிநீர் விழவிட்டு மறுநாள் திரும்பவும் மண்ணை ஒருசாண் கிளறிவிட்டு, வெய்யில் வெப்பத்தில் எரியிடல் வேண்டும். இப்படியாக பனிநீர் விழவும் வெய்யிலில் எரித்திடவும் மூன்றுநாள் கிளறிக்கிளறி சுவறவிட்டு, நாலாம் நாள் பார்த்தால் கம்பிகம்பியாக கதிர் கிளம்பும் மூன்று நாள் விட்டுப் பார்த்தால் கம்பியாக ஓடி வளர்ந்திருக்கும்.



251. பின்னும் மூன்று நாள் சூரியக் கதிர் கனல் எரிப்பு வேகத்தால் பேதித்து பூவாகப்பொரிந்து பூர்க்கும். ஒரு அங்குலப் பிரமாணம் வரை பொங்கும நீர் பொரிந்து மலரும். கிளிஞ்சலால் எடுத்து பத்திரமாய் சேகரித்து, குரு சுன்னம் பண்ண இத்துடன், நான்கு இராசயனப் பொருள்கள் கூட்டி பதமாய் கல்வத்திலாட்டி, சுடர் சூட்சமாய் 50 எருவில் புடம் போட்டு நீற்றவேண்டும்.

ஆ. வி. வி. :—தெய்வத் தன்மை வாய்ந்த சித்தர் திருவள்ளுவ நாயனார் அருளிய நூல்களான, "ஞான வெட்டி 1500" "நவரத்தின வைத்திய சிந்தாமணி" "பஞ்சரத்தினம் முதலிய நூல்கள் ஆதாரப்படி, சித்தர் கல்ப ரசாயன தயாரிப்புக்கு அவசியமான பூநீர் பற்றிய விளக்கம் எனது ஆசான் காலஞ் சென்ற உயர் திரு சித்த ஆயுள் வேத வித்துவான், பொன்னம்பல முதலியாரிடம் பார்த்த ஞாபகத்தின்படி, எனது அனுபவ நூலாராய்ச்சியின் மூலமும் தெரிந்தவரை எழுதலாயிற்று. பூநீர் என்பது சித்த மருத்துவ விஞ்ஞானக் கலை மறைப்படி எவ்வளவு அவசியமானது என்பதை ஆரம்பத்திலிருந்து இந்த அத்தியாயத்தில் தெரிவிக்கப்பட்டிருக்கிறது. இந்தப் பூநீர் என்னும் விஞ்ஞான ரசாயனப் பொருளில் பலவிதம் இருக்கிறது. பூமண்டத்தில் எந்தெந்த நாட்டில் பூநீர் விளைவு காணலாம் என்பதிலிருந்து, அந்தந்த நாட்டு பூமிவள ஊரசார அமைப்புப்படி விளைச்சல் சிறிது பேதப்படலாம். வள்ளுவர் தனது நூலில் தெளிவுபடுத்தியிருக்கிறார். மலைச்சாரலில், நதி, ஓடை, அருவி முதலிய நீர்த்தேக்கம், பலநாள் காய்ந்து சூரிய வெப்பத்தால் பூமி மண் கீழ்த் தங்கி உறைந்து உப்பாகிவிடும் என்பதையும் கூறப்பட்டிருக்கிறது.

இங்கு (1) வண்ணான் உபயோகிக்கும் பூநீர் (2) பசந்த சவுட்டு மண் பூநீர் (3) சித்தர் யோகிகள் கல்ப ரசாயனத் தயாரிப்புக்கு வேண்டிய கிரியா செய்கை தந்திரவகைப்பூநீர் கூறப்பட்டிருப்பது உணர்தற்குரியது.

முதல் கூறப்பட்ட வண்ணான் பூநீர் தயாரிப்பு வள்ளுவர் நாயனாராகி மக்களுக்கு ஆசானாகி விளங்கியிருக்கிறார் என்பதும், விஞ்ஞான கல்ப ரசாயன மருத்துவக் கலையிலும், குருவாகி, சித்த மருத்துவ மறை விஞ்ஞானிகளுக்கு எளிதில் உணரும்பொருட்டு, உபமான உபமேய உதாரணங்களுடன் தெரிவிக்கும் பொருட்டு, முதலில் வண்ணான் உபயோகிக்கும் பூநீர் பற்றி உபதேசிக்கிறார். ஆங்கிலேயராட்சி மூன்றாவது பகுதி முன்வரை தென்னாட்டில், கிராமங்கள்தோறும், மக்களின் துணி ஆடை அலங்கரிப்புகள், சுத்திசெய்து வெளுக்கும்பொருட்டு, ஆங்காங்கு சுற்றுப்புற உவர்மண் பொட்டல்களிலிருந்து, தூய்ய வெண்மை நிறமோடு கூடிய ஒருவகை ரசாயன உறமண் வாரிக்கொண்டு வருவார்கள். அதுவும் மாசி, பங்குனி, சித்திரை மாதங்களில் நன்றாய் மண் பூர்த்து பூரிப்பாகி மாவுமாதிரி வெள்ளை நிறமாய் வெய்யிலுக்கு தோற்றமளிக்கும். வேண்டுமென்கிற சமயத்திற்கு வாரி எடுத்துக் கொண்டுவந்து தண்ணீரில் கரைத்து, சட்டிக்கு (வண்ணான் தாழி என்று பெயர்.) மேலே துணி வேடுகட்டி நனைத்து மூட்டையாய் வைத்து, கீழே நெருப்பிட்டு எரித்து ஆவி துணிகள்உள் பாயும்படி செய்வார்கள். பக்குவம் அவர்களுக்கு நன்றாய் தெரியும். இதற்கு என்று இடமும் ஊருக்கு வெளிப்புறமும் தயாராக்கி வைத்திருப்பார்கள். ஆறவிட்டு எடுத்து, துணிகளை துவைத்து அழுக்குகள் நீக்கப்பட்டு உலர்த்தி கொண்டுவந்து விடுவார்கள். இதன் பெருமை, மருத்துவ ரசாயனக் கலை பயில்பவர்கள், ஆராய்ச்சிக்காரர்கள் உணர்தல் அவசியமாகும்.



இந்த வண்ணான் உபயோகிக்கும் பூநீர் உவர்க்காரமாகும். இங்கு விஞ்ஞானக் கலையின் சிறப்பின்படி பூமியின் ரசாயன உவர் நீராகிய தண்ணீர், சூரியவெப்பக் கனலினால் நீர்த்துப்போய் அதாவது காரமாகி பூரித்து, பூவாகி, திருநீறு, சுண்ணாம்பு நீரு என்கிறமாதிரி நீராகி விட்டது. இந்தப் பூநீரில் காரசார ரசாயனக் கலப்பினால் உற்பத்தியானபடியால், தண்ணீரில் கரைத்து ஆவியாகி துணியில் பட்டமாத்திரத்தில் எல்லாவித கசடு, அழுக்குகளை நீக்கி, விஷத்தன்மைகளையும் போக்கடித்து, வெண்மையாய் சுத்தமாக்கிவிடுகிறது இதிலடங்கியிருக்கும் ரசாயனஉற காரசாரத்தன்மை.

அதுபோல் மானிட தேக உடலில் இருக்கும் அழுக்கு, கசடு, வியாதிக்கோளாறுக் கெடுதிகளை போக்கடிக்கவும், இத்தகைய பூநீர்களால் மருத்துவ ரசாயன சித்தர் விஞ்ஞான கிரியா தந்திரங்களால் முடியுமென்பதையும் அறிவிக்கப்படுகிறது. அடுத்த கட்டம் இதிலிருந்து உப்பாக உருவாக்கி கல்ப ரசாயனங்களுக்கு சேர்க்கவேண்டிய கிரியைகளையும் கூறப்பட்டிருக்கிறது.

இரண்டாவதாக கூறப்பட்டது, வண்ணான் குறிப்பறிந்து எடுக்கும் உவர்மண் போல், சவுட்டு மண்ணிலிருந்து உற்பத்தியாகி கசிந்து வழியும் ரசாயன பூசார நீரிலிருந்து, சூரிய வெப்பத்தால் பொரிந்து பூரித்து அமைந்த பூ நீராகும். சவுட்டுப்பூ நீரிலிருந்து சவுட்டுப்பு தாயாராகும்.

மூன்றாவதாகக் கூறப்பட்ட பூநீர் சித்தர்கள் யோகிகள் ரசாயன விஞ்ஞான வல்லுனர்கள், காயகல்ப ரசாயன தயாரிப்பின் பொருட்டு, செய்து கொள்ள வேண்டிய கிரியா விஞ்ஞானம் போதிக்கப்படுகிறது. அதாவது சித்திரை, மாசி, பங்குனி மாதங்களில், பூநீர் உற்பத்தியாகும் சந்தர்ப்பத்தில் சேகரிக்கும் கைபாகக் கிரியைகள் காரசார ரசாயன உறக் கலப்பு மண் சந்திரனது சீதக்கதி

ரால் பனி நீர் விழுந்து நனைந்து ஊறி, சூரியனது கனல் வெப்பால் காய்ந்து முளை கிளம்பி பூர்த்திருப்பது. இதற்குச் செயல்படும் நியமங்களைக் கூறப்படுகிறது. மேலே கூறிய குறிப்பறிந்து இருக்கும் மண்ணை நன்றாய் ஒரு சாண் உயரம் கொத்தி கிளறி சுற்றும் வேலி கட்டி, பனி நீர் அதிகபக்ஷ மண் கிரகிக்கும்படி உண்டு பண்ணுதல். மறு நாளும், அடுத்த நாளும் மண்ணைக் கிளறி, கீழும் மேலுமாய் பிரட்டி பனிநீர் மண்ணில் முழு அளவு ஊறும் படி செய்து கொண்டே வந்தால் 4வது நாள் மேல் சூரியன் கதிர் வெப்பத்திற்கு கதிர் கம்பி முனை கிளம்பும். பூரித்து மயிர் கம்பிபோல் ஒரு அங்குலம் உயரம் கிளம்பி யிருக்கும். நீலவர்ணக் கம்பிபோல் அடர்ந்து கிளம்பினது மறுநாள் சூரியக் கனலால் உலர்ந்து படிந்திருக்கும். பிறகு கிளிஞ்சல் சிப்பியால் சேகரித்து எடுத்துக் கொள்வது. இப்படி சேகரித்த பூ நீருடன், சுன்னத் தயாரிப்புக்கு ரசாயன வஸ்துக்கள் விதிப்படி மூன்று சரக்குகள் சேர்த்து அரைத்து மெழுகாக்கி ஐம்பெரு தருவில் புடம் போட்டு சுன்ன குருவாக்கி கல்ப சிகிச்சைக்குப் பயன்படுத்திக் கொள்ள வேண்டும்.

குறிப்பு: இந்த 3வது வகை பூநீர் தயாரிப்பு, எனது ஆசான், தின்னனூர் தி. பொன்னம்பல முதலியாரவர்கள் வீட்டில், நீலவர்ணச் சாயல் மயிர் கம்பிபோல், அங்குலம்மேல் பூர்த்து கிளம்பி இருந்ததை எனக்குக் காண்பித்தார். பார்த்திருக்கிறேன். அதன் விவரம் தெரிவிக்க மருத்து விட்டார். இது 1936ல் 1937வது வருடமாகயிருக்கலாம்.

### பூநீர் படர்ந்தெழும்பும் விவரம்

படருமம்புவி பாரினிற் பூநீர்ப்படர்ந்தது நா
ளிடரிலாமலு மினியுவரருகவு மிசைந்து
வடர்ந்து மூன்றுநா டருகிருந்துவர் பசைந்தது மண்
ணுடனெ சாணுய ரெடுத்திருகால் கொண்டு வுதைத்தே 252



உதைத்திரஞ்சுசாணங்குலங் கொண்டவை சதுர் நினம்
புதைய காலடி யழுந்து கெட்டணையது பொரும்ப
சதைய மண்ஜலஞ் சிதரவும் புவிதனிற் சார்வாய்
விதமதாய்க் கதிர்ச் சூரியன்பட ரவிமுகமே 253

கனலினுலதி வேகமென்னுற் சொல்லக் கருத்தாய்ப்
புனலுமாமதிப் புகழுஞ் சந்திரனொளிப் பொருந்த
வனலினுலதி காரமென் றருளியவதித
மனதினுலறிந் திருவிதநாட் கண்டு மகிழ்ந்தே. 254

அருணுலதி காலையிற் கதிரவனவனருளாற்
கருணை முன்முறைப் படியெனுஞ்ஜாண துக்கருதல்
வருண நீர்புனல் வாரிமண் ணெடுத்தொரு ஜானுயரத்
திரணை போடுவ துவரெலா மெடுத்தெரிந்திடுமே 255

### நாத விந்து நிறம்

துரித நாதவிந்துவற் கசிவது ஜலமொழிந்து
பொரிதன் போலுவர் பூவதும் பூர்த்துமே புகழும்
வரிதன்போற் செழும் பசுமை வெண்மரகதவொளியாய்க்
கரியமாற்றிரு மதிமலர் சூடியகாப்பாம். 256

வெண்மதி சந்திர நிலவொளிக் கதிரவனியல்பா
லெண்ணுமிப்படி விளைவன மிலகிய பயிரிலகு
மெண்ணுஞ் சாரையு மறவமுங் கூடியபொருட்டால்
வண்ணமுலி மயூரப் பூடெனுங் கதிர் மதமே. 257

—நவ. ர. சி. வை. சி. ப. 3

252. பூநீர் படர்ந் தெழும்பும் விதத்தை திருவள்ளுவர் தனது மருத்துவ நூலாகிய "நவரத்தின வைத்திய சிந்தாமணியில்" கொஞ்சம் உணர்ந்து கொள்ளும் அளவுக்கு கூறப்பட்டிருக்கிறது. பூமியில் உவர்மண்ணில் பூநீர் கசிந்து உறவாகி, பசந்த மண்ணுகி, அருகி இருக்கும் பாத்தியாக்கி ஒரு சாண் உயரம் வெம்பி

விட்டால் காலை வைக்கும்போது இறங்கும். மூன்று நாள் பூமி நாதமாகிய நீர் கசிந்தும், சந்திரனது பனிநீரும் கலந்து மண் ஈரப்பசையுண்டாகிவிடும். காலால் மிதித்து பனிநீர் இழுத்துக் கொண்ட மண் கலப்புத் தன்மை ஏற்பட்டு சுவறிடும்படி பிசைந்து வைத்தல்.

253. "சதுர் நிளம்" என்ற பதப்படி பாத்தி சதுரமாகக் கட்டி, கால் பதிந்து கீழிரங்கும்படியான நிலையில் பதப்படுத்தி சூரியன் கதிர் படவிட்டு வைக்க வேண்டும். மண்ணில் கலந்த காரசார பனிஜெய நீர் வெளியில் போகா வண்ணம் செய்து வைக்க வேண்டும்.

254. சூரிய வெப்பத்தால் காரசார நீர் சுவரிடும் இரவில் சந்திரனின் பனி நீரினுல் ஈரப்பசையுண்டாகி கசியும். மறு நாள் காலை பழையபடி, மண்ணைக் கிளறி நீர் கீழ் இறங்கி சுவரும்படி செய்து கொள்ளல் வேண்டும். இப்படி, பனிநீர், சூரியன் வெப்பம், மண்ணில் தங்கிய காரசார நீரும் சேர்ந்து நன்ருய் உறமாகி மேலும், 2 நாள் செய்து வைக்க வேண்டும்.

255. முன்போலவே காரசாரப் புனல் மேலே தங்காமல் சாண் உயரம் காலால் மிதித்து சுவர்ந்திடும்படி செய்து, வெளியில் கசிந்து வந்துவிடாமல் திரணைபோட்டு வைக்க வேண்டும்.

256. பின்னர் சூரியனது சித்திரை மாசி பங்குனி கடும் வெய்யிலில் காய விட்டுவிட வேண்டும். ஈரப்பசை உலர்ந்து மேலே பொரிபொரியாய் உவர் மேலே கிளம்பும். மேலும் வெய்யலில் காய்ந்த பின்னர், மண்ணுேடு கலந்த காரசார உவர்நீர் மேலே பொங்கி பொரியாகி, பூர்த்து மேலே படிந்து விடும். செழும் பசுமை, வெள்ளை நிறமான மரகத நிறமாய் ஒளியுண்டாகி இருக்கும்.

257. தூய்ய வெண்மையான சந்திரனின் சீதக் கிரணக் கதிரும், சூரியனது கனல் கதிர் கிரணமும், மண்ணின்



உறமும், உறவாகி காரசார ரசாயனப் பதம் பெற்று, இயல்பாகவே விளைந்து உற்பத்தியாகி பயிராகும் இந்தப் பூநீர். சாரைப் பாம்பு, நல்ல பாம்பு போல் சாரமுங் காரமுங் கூடி விளைந்த பூநீரானதால், "கதிர் மதமே" மதமாகிய பூமி மண்ணின் கொழுப்புக் கசிவு சூரியனின் கதிரினுல், கதிர் விட்டு பொரிந்து பூவாகி அமைந்த காரணத்தால் மயூரப்பூடு என்று சொல்வர்.

விஞ்ஞானச் சுருக்கத்தந்திரச் சமுத்திர நீரை, மாசி, பங்குனி, சித்திரை மாதங்களில், பூமியை பண்படுத்தி, அதில் பாய்ச்சி, மிதிந்து மிதிந்து மண்ணில் கலந்து சேராகப் பண்ணி, வெய்யலில் காய வைத்து, நீர் சுவர்ந்த பின்னர் மறுபடி சமுத்திர நீர் விட்டு பிசைந்து மிதித்து, வெய்யில்பட காயவைத்து தகுந்த பக்குவத்தை யுண்டு பண்ணி விட்டால், மண்ணில் உப்புச் சத்து அதிகமாக தங்கி, சூரிய வெப்பக் காய்ச்சலால் உப்பாகிப் பூர்த்து விடுகிறது.

அதுபோல, மாபெரும், சித்தர் யோக விஞ்ஞான வல்லுனர்கள், சீவத்தன்மை பொருந்திய ஒருவகை ரசாயன உற உவர்மண் உணர்ந்து அதில் கசிந்து நிற்கும் காரசார நீரை அதே மண்ணில் ஆழமாக வெட்டி, பாத்தி கட்டி சந்திர சூரிய தேவனின், ஜீவக் கிரணக் கதிர்கள், அதிகபக்ஷம் கிரகிக்கப்பட்டு, வெளியில் கக்கி பூரித்து படர்ந்து மண்மேல் படிந்து, நீரின் பூ, பூ நீராகி பொரிந்து புலர்ந்து ரசாயனப் பொருளாகி விளங்குகிறது. இதில் பெரும்பாலும் மனித உடலுக்கு வேண்டிய சீவ கிரணக் கதிர் அடக்கம் பெற்ற, பூமிகாரசார சத்து உறமானதால் சித்தர்கள் இதை இன்னும் வேண்டிய சுத்தி, ரசவர்க ரசாயன உரக் கலப்புடன் பக்குவப்படுத்தி, காய கல்ப ரசாயன மருந்துகளாக உபயோகிக்கும் வழிமுறைகளையும் நூல் முகாந்திரமாக சித்த மருத்துவ விஞ்ஞானக் கலைப் பொக்கிஷத்திலொன்ருக விளங்குகிறது.

கல்லுப்பே பூநீரெனல்
பாரைப் பகருங்கல்லுப்பதாம்
வேரேயுண்டோ வெளியினில் ரெண்டதா
மூரையே யடுத் துழவர் காண்கிலார்
நீரை விட்டு நெறியை விட்டாரன்றே 258

ந, ர. வை. சி. 233

சமுத்திர நீரும் உவர் மண் சம்பந்தத்தால், கட்டியாய் பாரையைப்போல் கல்லுப்பாக விளைந்து காணப் படும். வேறுவிதமாகவும் இயற்கையாகவே கல்லுப்பு விளைவு உண்டு. பூ நீர் உப்பாக விளையும் பக்கத்து ஊர், உழவர்கள் காணமாட்டார்கள். நீராகிய பூ நீரை விட்டு, அதை உப்பாக பூர்க்க வைக்கும் நெறியை விட்டு விட்டார்கள்.

பாலை நிலத்து பூ நீர் சந்திரனுப் பாகுதல்

தரணிதனிற் பாலைநிலந் தர்மபுரி
திருப்பத்தூற்றழைக்கும் நாட்டிற்
கரணி சந்திரனுப்பதுவாங் களர்
நிலத்தோர் காலங்காணுங்காணு
மரணமதா-மறுபத்து நாலுசரக்க
தீதமது வயிரம் நீராம்
பரணிதனில் வைத்து கெந்திபற்பமது
செய்யநன்று பலிக்குந்தானே. 259

மாசி பவுர்ணமியில் வந்தெடுப்பாரந்த நிலந்
தோஷிபல பாவிகட்குத் தோன்றுது—மாசியும்போய்ப்
பங்குனியுஞ் சித்திரையும் பவர்ணமியிற் சித்தர்களுங்
கங்குல் விடியாத முன்பு காண். 260

259. தர்மபுரி, திருப்பத்தூர் சுற்று வட்டாரங்களில் பாலைநிலம் பூமியின் பரப்பில் காணலாம். பால்போல் களர் நிலச் சாயாலாகும். சந்திரனுப்பு களர் நிலத்தில் களர் பூநீர் பூர்த்து தருந்த காலங்களில் பூர்த்திருக்கும்.



இந்த சந்திரனுப்பினால் 64 பாடான சரக்குகளும் நீராகி விடும். வயிரம் நீற்றுப் போய்விடும். கெந்தகபற்பம் இந்த உப்பு நீற்றில் நன்றாய் பலிக்கும்.

260. மாசி மாதம் பௌர்ணமியில் அந்த நிலம் பார்த்து வந்தெடுப்பார்கள். பல பாவிகட்கு அந்நிலம் கண்ணுக்கு தோன்றாது. மாசி மாதம் போய், பங்குனி, சித்தரை பவுர்ணமியில் சித்தர்கள், சூரியன் உதயமாகு முன், சேகரித்து எடுத்துக் கொள்வார்கள்.

களர் மண், பாலை நிலம், சந்திரனுப்பு, மாசி பங்குனி சித்திரை, பவுர்ணமி, விடியுமுன் சேகரித்து உப்பாக்கிக் கொள்ளல்.

முடுகு சந்த விருத்தம்

புவியில்வாதிகளும் வைப்பு செய்பவர்கட்
பூதலத்திலுவர் காட்டினிற்
புனலுஞ்சுண்ட கதிர்படவுமே ரவியும்
புகல்வதே தசைதன் தீக்ஷையிற்
புவியிலிந்தவிதம் நீரிற் பத்துவிசைப்
பூட்டியே ரவிதன் முகம்பட
பூநீராகுமிது வூசரமிது காண்
பூட்டினார்கட் ஜெயநாதமாய்
கவியன் முத்தமிழின் ஞானமெட்டியருட்
கருது மாயிரமு மைனூற்
கைவசப்படுதலன்றோ வுண்டுலகிற்
காரணக் குருவின் கிருபையாற்
றவியொன்றுது தவமெலியொன்றுது விதி
தந்தையிந்த வழியாண்டைகாண்
ஜாதிபேத மதாசாரம் போலிருகிச்
ஜடம் வலுத்துப் பிலமாகுமே 261

ப. 85 செ. 437

### சுத்த ஜலத்தின் பெயர்கள் விவரம்

கருணையானவறுசுவையி நீறு
    சுறு நீருவஸ்துவுநீர்ப்பான நீற்
கடல்நீரதனிற் ருபரங்களொடு
    கார்பொழிந்திடு மீரேழினி
லருணன்றன்னுதய மதிபொழிந்தருளு
    மண்டபிண்ட பகிரண்டமு
மநேக ஜெந்துவுயிற் ஜீவனுய்ப் பிறவி
    யனுபோகத் தீதவ் வாட்கையாற்
பரனுமுப்பதனை யறிவினுலறியும்
    பாடுபட்டருமைப் பகவர்காண்
பகலும்போலிரவும் மாகுந்தன்னுளமே
    பண்புமாரறிவர் ஞானிகட்
தருணமாம் பூருவகால நாலறிவ
    தந்தைவிந்துட லாதலாற்
றசதீக்ஷை யாண்டுவளற் கற்பமுண்
    டுணர்வற்ருர் புவியிலறிதுள்ளமே 262

நவ. ர.சி. ப. 89 செ.452

### விந்துநாதம் காரசாரம் வீட்டிலொன்று நாட்டில் ரெண்டென்பது

வீட்டிலொன்றரிதற் நாட்டில் ரெண்டெரிதன்
    மேலும் வாரி யிலொன்றறிதலால்
வீட்டிலொன்று வெளிகூட்டில் ரெண்டெனிலுமே
    விளங்குங் கரியுப்பதாய்
நாட்டிலொன்றுரவி வீட்டிலொன்றுமிவை
    நாட்டினுர்கட் பதினெண்மரும்
ராஜராஜர்களுமே மயங்கிடுவர்
    நாணயப் படுவரில்லைகாண்



காட்டிலொன்று கடல்நீரில் ரெண்டு
    கருவீட்டிலொன்று வெளிநாட்டினிற்
கறுவியொன்று யினமறிவுமொன்று வழி
    கானலுண்டு களற்பூமியில்
மேட்டிலொன்று புனல்நாட்டிலொன்று கனன்
    வெடியுமுண்டு வுவர் வழலைதா
    விந்துநாதமெனிற் காரசாரமெனு
    மேலும் பூநீர் வளராகுமே

நவ.ர.சி.ப.89. செ.453

### வேதாளப்பூ டைதெனல்

காணுமலையிற் கல்லது விண்டிடா
ரூணுமேயுவற் சாரம் புனலெனிற்
பூணுமேயுவற் பூத்திருக்கு மிடம்
வீணுவீணல்ல வேதாளப் பூடதே 264

நவ. சி. செ. 363

261. பூலோகத்தில் ரசவாதிகளும், காரசாரக் கலப்புக் களினுல் வைப்பு தயாரிப்பு ரசாயனப் பொருள்களும் செய்பவர்கள், உவர்மண் காட்டினில், பனிநீர் கலந்த இரசாயன உரக் கசிவு, சூரியன் வெப்பக்கனலினுல் நீர் சுண்டி உவர் உப்பு பூர்த்து, பூ நீராக விளைந்து பரவி இருக்கும். இதை வாரி சுத்த தண்ணீரில் கரைத்து, சூரியன் கதிர் வெப்பத்தில் காயவைத்து உலர்ந்த பின் எடுத்துக்கொள்வர். இந்த மாதிரி பத்து விசை உழமண் தண்ணீரில் கரைத்து கரைத்து நீர் சுண்ட எடுத்துக் கொள்வது தச தீட்சையாகும். இதை ஊசரம் என்றும் சொல்வர். இதை ஜெயபூமிநாத மென்றும் பேசுவர். முத் தமிழ் செய்யுள் 1500 அடங்கிய "ஞானமெட்டி நூல் விளக்கம்" கைவசப்பட்டு, காரணக்குருவின் அனுக்ரகமும், விதி, தவவலிமை, தந்தையின் வழி முதலியனவை அனுசரித்து, ஜாதிபேத மதாசார தாரதம்மிய

சிறப்புக்குத் தக்கபடி, சடம் வலுத்து பெலத்தையும் அடையும், தன்மை யுடையதாயிருக்கும்

262 சித்தர் ரஸாயன விஞ்ஞான மறை பரிபாஷைப் படி பல இடங்களில் சுத்த கங்கை எனக் கூறப்பட்டிருக்கிறது. சந்தர்ப்பம், கிரியாபேதம், உபயோகநிலை முதலியவற்றிற்கு உகந்தபடி விஞ்ஞானி அறிந்துகொள்ளத் தகுந்தவன் : அறுசுவை நீர், வஸ்துவின் நீர், பானநீர், கடல் நீர், கார் பொழிந்திடும் ரசாயன விந்துநீர் தன்னால் அண்ட பகிரண்ட சீவசெந்துக்கள் வாழ்ந்து தழைக்க வைக்கும் நீரினால் ஈசனமைத்த முப்பு பாடுபட்டு அறிந்தவர்கள் எய்தலாம். பகல் இரவுபோல் உள்ளம் 'பண்பு யாரறிவார்கள் ஞானிகள், பெரியோர்கள், தந்தை விந்து உப்பாதலாற், தசதீட்சை செய்து கற்பம் உண்டு பூலோக மாய்கை உள்ளம் அற்றவர்களானார்.

263. வீட்டிலொன்று = நாட்டிலிரண்டு. விந்து நாதம், காரசாரம், இரண்டுவிதம் பூநீரில் உண்டு. கடல்நீர், உவர் வழலைநீர், அளர்நீர். கரியுப்பில் பூமியின் உவர், கடல்நீர், வழலை கலந்தே உற்பத்தியாகும். இந்த செய்யுள் பூநீர்பற்றிய ரசாயன விஞ்ஞானமாகும். பூமியின் காரசார கலப்பால் உற்பத்தியாகும் பூநீர் யின வகைகளை உணர்த்துகிறது. விஞ்ஞான அறிவுக்கு எட்டியபடி அறிந்துகொள்ளலாம்.

264. மலைச்சரிவு, காடுகளில் காரசார உவர்பூநீர் சேகரிக்கப்பட்டு சில வருடங்களில் ஆங்காங்கு, சுக்கான்பூநீர் கல்லாக உருவாகிவிடுகிறது. உவர்சாரப் பூநீர், கட்டி களாகவும் இயற்கையாகவே உற்பத்தியாய்விடுகிறது. இந்த வகைகளில் உதாரணமாக சுக்கான் கல்பூநீர், சுண்ணம்புக்கல் பூநீர் உவர், சவுட்டுப் 'பூநீர் சேகரிக்கப்பட்டு இயற்கையாகவே கிடைக்கும் பூநீர் கட்டி கல்வகைகள் இயற்கையாகவே பூத்துக் கிடப்பவைகள். சிருட்டிக்





கலப்புத் ' தன்மையால் விளைவதானதால் வேதாளப்பூடு என்று இதற்குப் பெயராகும்.

பிரிவு–2

## உப்பை பிரதானமாக எடுத்துக்கொண்ட காரணம் கூறுதல்

### கொச்சகம்

அண்டமென்ன பிண்டமென்ன அம்புவி யாதீதமென்ன
கண்டதென்ன கேட்டதென்ன காருமில்லா மாரியுண்டோ
எண்டிசை யெல்லாஞ்செனித்த யிந்திரிய' உப்புமயம்
நின்றவுப்பு வாரியினால் நீடுலகெலா முவரே 265
ஞா.வெ.செ.1381

உப்புமய மப்புமயமோகோ நாதவிந்தின்மயம்
இப்புவியெல்லாஞ் செனித்த யிந்திரிய வாழ்க்கைமயம்
கைப்பதுவில்லாமல்செகங்கண்டதென்ன காண்கிலென்ன
முப்பது கரணுதியிலுமுடித்து வைத்தா ரீசனுமே 266
1383

### கலித்துறை

எண்பத்துநான்கு நூருயிரலட்ச மெவ்வுயிர்க்கும்
உண்பதுவுங் கைப்புவர்சாரத்தினலுயி ருற்பவங்காண்
ஐம்பத்தோரட்சர வோங்காரங்கொண்ட அவ்வெழுத்தில்
உண்பதுறங்குவதுப் பொழிந்தால் செகமொன்றிலையே
267
ஞா.வெ.ப.190செ.1385

265. பிண்டமானாலும், அண்டமானாலும், அகண்டமான பூமண்டலத்தில், கண்டதென்ன, கேட்கப்படுவன யாவும், எட்டுத் திசைகளிலும் எல்லாவகை யோனியிலும் செனிக்கும் செந்துக்களும் தாவரங்கள் முதலியன யாவும் இந்திரியமயமான உப்பினால் தான். கார்மேகத்தின்

பொழிதலால் மாறி மழைபொழிகிறது. அப்படி பொழியும் தண்ணீர் பூமியில் நின்ற கலப்பால் உப்பாய்விடுகிறது. மண் சம்பந்தத்தால் உலகமெலாம் உவர் விளையலாயிற்று.

266. உப்புவானது அப்புவான தண்ணீரின்மயம். அதுதான் நாத, விந்தின்மயமாகும். இந்த பூலோகத்தில் ஜெனித்த செந்துக்கள் யாவும் எல்லாப் பிறவிகளும் இந்திரியத்தால் ஏற்பட்ட வாழ்க்கைமயமாகும். உப்பின் கைப்பில்லாவிட்டால் செகத்தில் என்னதான் காண முடியும், வேறு என்னதான் காண்பது? ஈசன் ஆதியிலேயே முடித்துவைத்தான் முப்பு வைத்தான்.

ஆ. வி.: பூவுலக சீவ, செந்து, தாவரப் பயிர்கள் உற்பத்திக்கு வித்தாக காரசாரக் கலப்பு உப்பை ஈசன் சிருட்டிக்குக் காரணமாக்கி முன்னமேயே முடித்து வைத்துவிட்டார் என்பதை உணர்த்தப்படுகிறது.

267. எண்பத்து நான்கு நூருயிர லட்ச யோனிபேத சென்ன உற்பத்தியாகக் கணக்கிடப்பட்டிருக்கிறது. அதில் செனிக்கும் எல்லா உயிர் ஜீவகோடிகளும் அவரவர்கள், அவைகள் உண்ணும் ஆகார உப்பு உவர்சாரத்தினுல்தான், உயிர் உற்பத்தியாகக் காரணமாயிற்று. ஐம்பத்தோரட்சர, ஓங்காரங்கொண்ட, அவ்வெழுத்தின் காரண சுரூப பிரம்ம சிருட்டியில் உண்பது, உறங்குவது, தொழில்கள் யாவும், உப்பில்லாவிட்டால் பூலோகமே செயல்படுவதற்கில்லை.

ஆசிரியர் குறிப்பு: மகத்துவம் பொருந்திய சித்தர்கள் விஞ்ஞான ஆராய்ச்சியில் வல்லுனர்கள். பல மொழிகளிலும் தெய்வீகத் தன்மைபெற்ற பேரின்ப விஞ்ஞானக் களஞ்சிய செருக்கினுல், உலக மக்கள் க்ஷேமத்தின்பொருட்டு, பல ஆராய்ச்சிகளின்பயனுக முப்பு, உப்புவைப்பற்றி சித்தர் நூல்களில் கூறியிருக்கிருர்கள். காலங் கடந்த வேற்றுமைகளாலும் ஆதரவு பழக்கங் குறைந்துகொண்டு தாழ்மையான நிலைக்கு



வந்துவிட்டபடியாலும், நூல்கள் பல மறைந்தும், சிதறுண்டு போனபடியாலும், மருத்துவ விஞ்ஞான தமிழ்மொழி வளம் குறைந்துவிட்ட தன்மையால் கண்டுகொள்ள முடியாத'நிலைக்கு வந்துவிட்டோம்.

ஆயினும் சித்தர்கோன் அகத்தியர் நேரிடை மாணுக்கனை திருவள்ளுவர், யுகதர்ம கலை, மொழிசீர் தாழ்படாமல் காக்கும்பொருட்டு கலைத் தமிழ்மொழி விஞ்ஞான சிறப்புப் பெற்று, நிலைத்து வளரும் பணிக்காகவே பிறவி எடுக்கப்பெற்று சில நூல்களை அருளியுள்ளார். அதுவும் காலப்போக்குக் காரணமாய், தேசீய சித்த மருத்துவ வல்லுனர்கள் அல்பமாய் குறைத்துக்கொண்டு வந்தமையால், உப்பு, முப்பு பற்றி விளக்கமான நூல்களும் குறைந்துகொண்டே போய்விட்டது. திருவள்ளுவர் நூலாகிய "ஞானவெட்டி" 'முப்பு சூத்திரம்' 'முப்பு கற்பம்' முதலியன நூல்கள் மறையுமுன், தகுந்த ஆதார அனுபவ விளக்கங்களுடன் எழுத வேண்டியதவசியமாய்விட்டது. சித்தர் நூல்களில் உப்பை ஏன் முக்கியமாய் எடுத்துக்கொள்ளப்பட்டது என்பதுபற்றி விஞ்ஞான நுணுக்கச் சுருக்கத்துடன் கூறப்பட்டுள்ளது.

அதாவது கார்மேக, மாறி மழையினுல் பூமண்டத்தில் பொழிந்து, பூமியின் மண், மழை நீர் கலப்பால், உவர் உறம் கலந்த மண்ணுகி உலகெலாம், ஆங்காங்கு பலவித உவர் கலப்பால், எல்லா சீவ, செந்து, பயிர், உற்பத்தியாக மூல காரணமாய் விடுகிறது. மாறி பொழிந்த வாரி பூமியில் கலந்து உவர்பக்குவமாகி, தங்கி உறைந்து நின்றது உப்பாயிற்று.

உவர் காரசாரத்தில் வளர்ந்து உற்பத்தியான ஆகாராதி பதார்த்தங்களை உட்கொண்டு அதன் சத்து, சாரம், இந்திரியமாகி, எல்லாம் செனித்தது. இப்படியாக 84 நூராயிரலட்சம் யோனி பேதத்தால் செனித்த உலக செந்து புல்பூண்டு, மானிட மிருக, புழு வர்க்கங்கள் யாவும். இந்திரிய, காரசார சத்தினுல் தான் சென்னம் எடுக்கப்பட்டுள்ளது. இந்த இந்திரியம் உப்புமய அம்சமாகும்.

உப்பு, அப்புமயமாகும். அப்புவாகிய தண்ணீரின் பூமிக் கலப்பால், உப்புமயமாயிற்று. பூமியும் தண்ணீர் கலந்த சத்து

நாதம். அதன் விளைவால் வந்த உப்பு விந்துவாயிற்று. அப்புவான தண்ணீரும், உப்பும் இரண்டு ஒன்றிற்குள் ஒன்று இணக்கமாகும்.

விந்துமயமான உப்பு இந்திரிய தயாரிப்பு இயற்கை உருவெடுக்குமுன், உவர் காரசாரமாக உலக பூமண்டலத்து மண்ணில் கலந்து பரவிகிடக்கிறது. இதில் பற்பல பயிர் ஆகார புல்பூண்டு வஸ்துக்கள், காரசார உவர்மண் சத்து அளவுக்குத் தக்கப்படி கிரகிக்கப்பட்டு, பற்பல பேத உயிர் வர்கங்களும் உற்பத்தியாகி வளர்ச்சியடைந்து வருகிறது.

இத்தகைய உப்பில் கசியுந்தன்மையான கைப்பு இருப்ப தால் தான், இந்திரியங்களுக்கும் கசிந்து உறுதி இழக்கும் தன்மையும் கரைந்து தேயும் தன்மையும், அடக்கம் பெற்று விட்டது.

இப்படி சிருஷ்டிக்கு காரணமான, காரசார உவர், உப்பு கைப்பு கசிவு வஸ்து உண்பதனுல் உயிர் உற்பத்தியாகும். இதை ஐம்பத்தோரட்சர சுருப இணைப்பில் அவ்வெழுத்துக் காதாரமான பிரம்ம தேவன் சிருட்டியிலேயே முடித்துவைத்து விட்டார். உண்பதும் உறங்குவதும் ஆகாரமான உப்பும் ஒழிந்துபோனுல் செகப்படைப்பு என்பதே இல்லாமல் போய் விடும்.

தெய்வத்தன்மை வாய்ந்த சித்தர் திருவள்ளுவர், வடமொழி யிலும் தேர்ந்தவர். மொழிப்பழக்கத் தேய்வினுல் கலைகள் மழுங்கிவிடுகின்றன. தெய்வீகக் கலையானதால், மொழிக்குரிய வேத கலைத்தேவன் அதனை நிலைக்கும் பொருட்டு வள்ளுவர் போன்ற சித்தர்களை அவதரிக்கக் காரணமாகித் தமிழ்மொழி விஞ்ஞானக் கலைகளை வெளியிடலாயிற்று.

ஊடிப் பெறுகுவங் கொல்லோ நுதல்வெயர்ப்பக் 1328
கூடலில் தோன்றிய உப்பு.

துப்புரவு இல்லார் துவரத் துறவாமை 1850
உப்பிற்கும் காடிக்கும் கூற்று.

நட்பிற் குறுப்புக் கெழுதகைமை மற்றதற்கு 802
உப்பாதல் சான்றோர் கடன்.



### கறியுப்பு சீவசெந்து கட்காதாரமாகும்

செகமெங்கும் சீவசெந்து கட்காதாரம்
உகமெங்கும் கறியுப்பென்றறிகிலார்
இகமெங்கும் ஏறி வாரியிலுமுண்டு
சுகந்தரும் சொரூப மீதாண்டையே

துதிபெரும் புவிதனிலே சுகாதீதமான
கதிபெறவும் கனிவுடனே பாரையுப்புக் காண்பரோ
மதிநீரினடிதனிலே வதிந்துரையுமுப்பு
அதிசய மீதாரறிவார் அகத்தியனருளாலே 268

வாயுவுடன் வன்னிகூடி வையகத்து நீரினில்
தாயும் தந்தை யாகச் சேர்ந்த வாறுபோல செனித்திடும்
ஆயும் போது பாரையுப்பு ஆனததினுலே
மாயுமே சரக்கு எல்லாம் மகிதலத்தினுப்பே 269

நித்த மந்த வுப்பையுண்டு நீணிலத்தில னேகரும்
மெத்தவும் மெலிந்துபோனுர் மேன்மையாகச் செப்பியே
வித்தையை யறிந்து தீக்ஷை விதியதை உணர்ந்துமே
வைத்தவுப்பு வைப்பு மாச்சு வஞ்சமில்லை யாண்டையே
270

உப்பு வென்றது உதரிநீர் விட்டிடில்
தப்புமோ சடலம் தரியாது காண்
செப்பு மார்கந் தெளிவுறத் தேர்கிலார்
இப்பு விப்புரி வாளடியினியக்கத்தால். 271

செகம் என்னும் பூமண்டலத்தில், உற்பத்தியான, எல்லா சீவசெந்துக்களுக்கு ஆதாரம் கறியுப்பு என்று அறிந்திருக்கமாட்டார்கள். இந்த உப்பு ஏரி தண்ணீரி லும், பரந்த பூமியின் கண் எங்குமுண்டு. சுகத்தைக் கொடுக்கக் கூடிய சொரூபவஸ்து இதுவாகும்.

உலகத்தில் சுகாதீதமான கதிபெறவே போற்றிப் புகழப்படும் கனியான, பாறைபுப்பை அறிந்துகொள்

வார்களோ, காண்பார்களோ. மகத்துவம் பொருந்திய சித்தர்கோன் அகத்தியர் அருளால், சித்தர் ரசாயனமறை உணர்ந்தவர், மதிநீர் என்னும் சமுத்திர நீரடியிலே உறைந்து கிடக்கும், படிந்த உப்பாகும்.

வாய்வு, வன்னி இரண்டு பூதவேகத்தாக்குதல் கூடி, வையகத்து நீரினில், தாயும் தந்தையும் சேர்ந்து உறவாடினது போல் உற்பத்தியாகியிருக்கும். அதுதான் பாறையுப்பு. இந்த உப்பை ஆராய்ந்து பார்த்தால், சரக்கெல்லாம் மாய்ந்துவிடும், இந்த பூமியின் கீழ் தலத்தில் படிந்த உப்புவினலே.

நித்தமும் இந்த உப்பைத் தின்று, ஆகாரத்துடன் தவிர்க்க முடியாத வஸ்துவாய் கலந்து உண்பார்கள். அனேகம் பேர் மெத்தவும் உடல் மெலிந்துபோனார்கள். மேன்மையாக உபயோகிக்கப்படும் வஸ்துவெனவும் சொல்லிக் கொள்கிறார்கள். சித்தர் ரசாயன விஞ்ஞானக் கலை வித்தை, கிரியா நுட்ப தந்திரமறிந்து தசதீட்சை விதி உணர்ந்தாராகில், வைத்த வைப்புச் சரக்கான உப்பாகும். இதில் வஞ்சகம் ஒன்றுமில்லை.

உப்பு என்னும் வஸ்துவில் உதிரியாய் நீர்க் கசிந்திடில், அதை உண்டு உபயோகிப்பவர்களுக்குத் தேகம் நிலைக்காது. உப்புக்கசிவு ஏற்பட்டு கறைந்திடுதல்போல் தேகம், மெலிந்து, தளர்ந்து, நிலைத்து நிற்க முடியாமல் போவது தப்பாது, என்பதை நேரிலும் காண்பாயாக. சித்தர் ரசாயன மறை விஞ்ஞானம் சொல்லும் மார்க்கங்களைத் தெளிவாக கற்றுணரமாட்டார்கள். பூவுலக வாழ்க்கையிலீடுபட்டவர்கள். பழக்க வழக்க இயக்கக் காரணங்களால் தெளிவுபடாத நிலை.



## சித்தர் ரசாயன விஞ்ஞானம்

### கொச்சகம்

நாதவிந்தென்றறியாது நான்மயங்கினேன் சிலநாள்
பேதமகத்தீசர் சொல்லப்பேர்களறிந்தே மகிழ்ந்தேன்
வாதமென்னமுப்புவென்ன வந்தவரலாறுமென்ன
பூதமஞ்சினுலுதித்த பூரணத்தைக் காண்கிலரே 272

—'ஞாவெ' 1640

பச்சையென்றவுப்பதுவும் பார்த்தாலுந்துய்யவெள்ளை
உச்சிதமாய்கொண்டுறுதி யுண்டதொருவுப்பது காண்
வைச்சபொருளாதியிலும் வாருதியினல் செனித்த
தற்சொரூபமாய்விதிக்குஞ் சங்கையிதைக் காண்கிலரே
273

—ப 225 செ 1645

சத்திசிவ நாதவிந்துசாரமதுங் காரமதும்
புத்தியினலறிந்தேன் புளியமுரியானதுவும்
வெத்தியிது விண்ணுமல்லமேல் கீழுமாயிருக்கும்
சித்தர்கள் மறைத்துவைத்த செய்கையிதைக் காண்கிலரே
274

272. சித்தர்கோன் அகத்தீசர், திருவள்ளுவருக்கு குருவான அகத்தியர் சொல்லிய பாட உபதேசத்தால், நாதம், விந்து, என்னும் சித்தர் ரசாயனம்மறைக் கருவான வஸ்துவை அறிந்து மகிழ்ந்தேன். நாதவிந்து இன்னதென்று அறியாது மயங்கினேன். வாதமென்ன, முப்புவென்ன, வந்தவரலாறு என்ன, பூதமைந்தினல் உதித்த பூரணத்தை கண்டிருக்கமாட்டார்களே.

ஆ. வி. திருவள்ளுவர் சம்சார, உலக வாழ்க்கை அனுபவித்து, வெறுப்புடன், துறவறம் பூண்டு, சிவபெருமானை பதமே கதி என நம்பி, சுற்றம், செல்வம் யாவும் இழந்துவிட்டு, மெய்ப்பதமான தபோ நிஷ்

டைக்குக் கிளம்பியாய்விட்டது. தகுந்த தேக, மன உறுதி, நோய்வாய்ப் படாமல் காப்பாற்றிக்கொள்ளும் சாதனமான கல்ப ரசாயனம் அவசியம் பயின்று அறிந்து கொள்ளல்வேண்டும்.

சித்தர் கல்ப ரசாயனநூல் பரிபாஷைச் சொல், புதிதாக வருபவர் எப்படி அறியமுடியும். தன்னுடைய மாணாக்கன், சம்சார உலகமோகம் கடந்து பக்குவமான நிலை அவஸ்தைக்கு வந்தவுடன் சித்தர்பிரான் அகத்தியர் தரிசன அருள் அளித்து உபதேசம் சொல்லலாயிற்று. உலகப் படைப்புக்கே நாதவிந்துதான் மூலகாரணம். இந்த ரசாசயன பத மர்ம ரகசியம் அகத்தியர் சொல்லக் கேட்டு மனமகிழ்ந்தார். ரசாயன கல்பத்துக்கு ஆதி மூலப் பொருள் விளக்குமுதல் மூலபாடம் துவங்கி உணர்ந்தாய்விட்டது. இந்த மர்ம ரகசிய மறையை இன்னதென்றறியாது மயங்கலாயிற்று. வாதம் = ரச வாதம் — முப்பு — உப்பு. இவைகள் எத்தகைய வஸ்துக்கள், வந்த, உற்பத்தி வரலாறுகளும் உபதேச பாட மொழிகளும் உணர்ந்தபின்னர், பூதமைந்து, பூரணத்தையும் தெளிந்து குருமூலம் அறிந்துகொண்ட வல்லமையினால் "காண்கிலரே" என்று வள்ளுவர் சொல்லலானார். ஏன், பெருமளவு மர்மரகசிய ரசாயன கல்ப சித்தர்மறை கண்டு அறிந்துகொள்ள மாட்டார்களே. காண்பதுவும் அரிது என்பதை உணர்த்துகிறார்.

273. பச்சையென்ற உப்பு. பார்ப்பதற்கு தூய்ய வெள்ளை. தவராமல் நித்யம் சேர்த்து உண்ணும் உப்புதான். சமுத்திரத்து நீரால் உற்பத்தி செய்யப்பட்ட, செயற்கை வைப்பினால் விளைந்த உப்பாகும். தற்சொருபமாய் வியாபித்து வழங்கிவரும் விதிமறை நுட்ப சங்கை கண்டிருக்கமாட்டார்கள்.

ஆ. வி. "வைச்ச பொருளாதியிலும் வாருதியினால் செனித்து என்கிற செய்யுள் பதம் சந்தேகத்திற்கிட




மில்லாமல் தெளிவாக்கப்பட்டிருக்கிறது. சமுத்திரத்து உப்புத் தண்ணீரை உவர் மண்ணில் பாய்ச்சி, கோடை காலத்தில் உப்பாகப் பொரிந்து, பக்குவம் பார்த்து சேகரித்து, வைக்கப்பட்ட உப்பு. மனிதர்களால் செய்து வைச்ச பொருள். இதற்குச் சித்தர் ரசாயன பரிபாஷை மொழியிலக்கணப்படி வைப்பு என்று கூறப்படும். மனிதர்களால் இரசாயன மறைநுட்பத் தொழில் கூட்டினால், பல வகைகளில், பாடாண, உலோக மாதிரிப் பொருள்கள் செய்துகொள்ளல், பதிலாக அதேமாதிரி, அதே குணத்தைத் தரும் வஸ்துவை பண்ணிக்கொள்ளல் முதலியவற்றிற்கு வைப்புச்சரக்கு" என்று வழங்கப்படும் சொல்லாகும். அதற்கிணங்க, சமுத்திர நீரிலிருந்து உப்பை உற்பத்தி செய்துவைச்ச பொருள் எனப்பட்டது. ஆதியிலிருந்தே இந்தமாதிரி உப்பு உற்பத்தி செய்து சேகரிக்கும் தொழிலிருந்து வருகிறது.

சந்தேகமற, குறிப்பிட்டிருப்பதும், உணர்வதற்குரியது. அவசியம், தவராது, உசிதமாய் அந்தந்த உணவு உட்கொள்ளும் ஆகாராதி பதார்த்தங்களில் எவ்வளவு உசிதமோ அவ்வளவு சேர்த்து உண்பதற்கு உபயோகப்படும் உப்பு என்பதை உறுதியாக கூறப்பட்டுள்ளது.

மாணாக்கர் மிரண்டு வேறு அர்த்தம் பண்ண இடங்கொடாமல், பார்த்தால் தூய்ய வெள்ளை நிறமாகயிருக்கும். கசிந்து, தண்ணீரில் கறையும்படியான உபயோகிக்கும் சாதாரண பச்சையுப்பு காணலாம் பார்.

"தற்சொரூபமாய் விதிக்கும் சங்கை" சித்தர் விஞ்ஞான ரசாயன வேதாந்த சொல்பதம் உலகமானிட, செந்து, சீவகோடிகள் தழைத்தோங்க, ஆதியாய் எல்லாவற்றிலும் இணைந்து, அப்புமயம், உப்புமயம், விந்து

நாதமயமாய், அசல் உப்புவின், தற்சொரூபமே, எல்லாவற்றிலும் அடக்கம் பெற்றிருக்கும் விதி சங்கைகளை, காணமாட்டார்களே என்பது கருத்து.

274. சத்திசிவம், நாதவிந்து, சாரம், காரம், உபதேசயருள்படி புத்தியினல் அறிந்துகொண்டேன். இவைகளே புளி அமுரி ஆனவிதமும் வெற்றிகரமாய் தெறிந்துகொண்டேன். ஆகாசத்திலே இருப்பதல்ல மேலுங் கீழுமாக சம்பந்தத்துடனே யிருக்கும் சித்தர்கள் மறைத்துவைத்த செய்கை யிதை கண்டுகொள்ள மாட்டார்களே.

ஆ. வி. சித்தர் ரசாயன கல்ப விஞ்ஞானத்தை, அகத்தியர் உபதேச மொழிப் பாடதிட்டத்தின்படி திருவள்ளுவர் சந்தேகம் தவிர்த்து, உணரும்படியாய், பின்வரும் சித்தர் ரசாயன விஞ்ஞானமறை மாணுக்கர்களுக்குப் போதிக்கும் நூல் அளவில் வெளியிட்டிருக்கிருர் என்பதை உணரலாம்.

உலக சராசரங்களில் உற்பத்தியாகவும், தழைத்து விருத்தியாகவும், ஆதி காரணமாயிருப்பது ஆண் பெண் எனும் இருவகுப்புச் சேர்க்கைதான். சித்தர் ரசாயன விஞ்ஞானப்படி, சரக்குகளை அடிப்படை பிரிவுகளை விளக்கப்பட்டுள்ளது. சிருட்டியிலிருந்து ரசாயன விஞ்ஞானமறை, யினச்சரக்குப் பிரிவுவரை தெரிந்துகொள்ள வேண்டிய முதல் கட்டமாகும். சத்திசிவம், நாதவிந்து அடுத்தபடி காரசாரம், அடுத்தபடி புளி அமுரி என்றபடி ஒன்றன்பின் ஒன்று படிப்படியாக, விஞ்ஞான மர்ம சித்தர் மறைமொழி கூறப்பட்டுள்ளது. மாணுக்கர்கள் திறமை விஞ்ஞான அறிவு வளர்ச்சிக்குத் தகுந்தபடி கிரகிக்கலாம்.



## சமுத்திர உப்பு சுன்னம் காயகற்ப ரசாயனமாகும்

(கொச்சகம்)

வாரி புகழ் மாமதுர வஸ்துவெனும் பானமதால்
வீரிய மென்றேயிருந்த விந்து பாழாச்சு துகாண்
நாரியர் தன்மாய் கைவிட்டு நான் பிரிந்தேனே தளவால்
மாரி பொழிந்த பயனமிர்த வாலைரசமுண்டேனே 275

—ஞாமெ. 790

உப்பதுவுமப்புமய மோகோ கோ திருமாலின் மயம்
அப்புவினல் முப்பாவமைத்தது காண் சுன்னமதால்
செப்பிடிலுங் காயகற்பஞ் சென்றதுமோராண்டு வரை
இப்பொருளைப் பத்திரமா யிச்சையுடனுண்டேனே 276

275. ரசவர்கத்தில் இனிப்பு ருசியான வஸ்துக்கள் பானங்களால், வீரியமாகிய விந்து பாழாய்விடும் நாரியர் தன் மாயைச்செயல் வலையியிலிருந்து விடுபட்டு பிரிந்த வகையால், மழை பொழிந்த பலனுக அமிர்த வாலைரசம் உண்ணப்பட்டது.

276. உப்பு என்பது அப்பு பூதமாகிய தண்ணீர்மயம் அதுவும் திருமால் அமர்ந்துள்ள சமுத்திரமயம். அந்த சமுத்திரமயமான நீர் அப்பு பூதமாகி உப்பாகி அமைந்ததை காண்பாயாக. அந்த உப்பின் சுன்னமதால், காயகற்பம் என்று சொல்லப்படும் ரசாயன கற்ப மருந்தை, ஒரு வருடம் வரை, பத்திரமாய், பிரியமுடன் உண்டேன் என்று கூறப்படுகிறது.

ஆ.வி.: இனிப்பு, மதுர ருசியுள்ள கசிவு ஆகார வஸ்துக்களை அருந்துவதால், விந்து வீரியமிழந்து பாழாய்ப் போய்விடுகிறது. பெண்கள் காம இன்ப லீலைகளுக்கும், மாயமாயிழுத்து சென்றுவிடும். சிற்றின்ப இனிய வஸ்து பானமாய்கையை விட்டு பிரிந்துவிடல் வேண்டும். மாரிகாலத்து மழை பொழிந்த ரசாயனத் தண்ணீர்மய அமுரி ரசத்தை வள்ளுவர் உண்டே

னென்பது விஞ்ஞான ஆராய்ச்சிக்குரியது. அமிர்த+வாலை ரசம். "மாரி பொழிந்த பயனமிர்தம்" மழை பொழிந்த அமிர்த தண்ணீர் தாரையின் பலனுக உருவான உப்பு (ரசம்—அறுவித ரசங்களில் உப்பு ஒன்று) பின்னர் வாலை ரசம்=சிவ விந்து உப்பு என்னும் பாதரச ரசாயன காயகற்ப வகை மருந்து தயாரிப்பு.

திருமால் என்னும் மகாவிஷ்ணு சயன திருக்கோலமாய் அமர்ந்திருக்கும் சமுத்திரமய தண்ணீரில் உருவான அப்பு பூத அமைப்பில் விளைந்த உப்பு. சமுத்திர உப்பு. இந்த சித்தர் ரசாயன விதிமுறைப்படி, காயகற்ப மருந்தாக சுன்னம் செய்து, வள்ளுவர் ஒரு வருடகாலம், பிரியமுடன் சாப்பிட்டிருக்கிறுர். பெண்கள் மோக, காம, யின்பத்திலிருந்து விடுபட்டு, நியமத்துடன் கற்பம் சாப்பிட்டு சாதித்திருக்கிறுர் என்பது உணரலாம்.

### உப்பு சுத்தியறிய வெனல்

அருகவு மிருந்தாடு தரவமுங்
குருகவுஞ்சனி கொண்டு மரித்திடின்
பெருகவுமுப்பு கல்லிற் பத்து பலங்
கருகவுஞ் ஜலக் காரம் படியதே. 277

—நவ. ர. சி. செ. 365

இட்டுமே கரைத்தேவிடு மூன்று நாட்
கட்டுமே ஜலங்கார மில்லா விடில்
வெட்டுமே வெண்ணிரமும் நிரமில்லை
தட்டும் விந்துவுப் பூவுக்கினமிதே. 278

—செ. 366

அன்னைகார மது படியொன் றினில்
வின்னமில்லா விவை மூன்று நாட்கட் சென்
றன்னைக் காரமது ஜலம் வாங்கியு
முன்னமக்கல் லந்நீரினிற் சுத்தியே. 279

—செய். 369



### பூ நீர் சுத்தி யறிய

(கலி விருத்தம்)

விள்ளும் வைப்பு விரும்பினதேது காண்
கள்ளமில்லா கருக்கடை சீனமா
முள்ளுஞ் சுத்த ஜலமெனக் காரந்தா
னில்லத் துண்டு வியம் புரேனுண்டையே. 280

—நவ. ர. சி. செ. 356

இயம் புங்காலையி லிந்நீர் படியொன்றில்
வியம்பும் பூநீர் விதுபத்துமே பலந்
தயம் பில்லாமற் றண்ணீர் தனிற் சுத்தியா
மியம்புவாரெனு மிச்சுத்தி யாண்டையே. 281

—நவ. ர. சி. செ. 356

### கட்டளைக் கலிப்பா

சுத்தியாங்கதிற் சூரியன்றன் முகஞ் சோரவுஞ்
ஜலஞ் சுண்டியே தொக்கினுல்
வெற்றியா மனற்போலும் வருதலில் மீதுங்
காரம் விரும்பு மருபடி
சத்தியானப் பூநீரது நாதமாந் தவளம் போன்ற
திற்றசை பத்துஞ் சென்றதாற்
குற்றமேது கொடூரமு மில்லை காண் கூரரி
யுவருப்பை யறிவதே. 282

—நவ. ர. சி. செ. 357

### உப்புச் சுத்திக்கிரியை

277. அருகவு மிருந்தாடு தரவமுங்" என்பது படமெடுத்தாடும் பாம்புக்கு அடங்கும்படி செய்வதும், மருந்தாக உபயோகித்துப் போட்டவுடன் தணிந்து போகச் செய்யும்படியான, படிகாரம், கலந்த தண்ணீர் ஜெயநீரில், பத்துப் பலம் உப்புக்கல், 1 படி தண்ணீரில் போடவும்.

278. கரைத்து மூன்று நாள் வைக்கவும். காரஜலம் சம்பந்தமில்லாவிட்டால் வெண்மையான நிறமும் இருக்காது. கட்டும் உப்புயினத்துக் கெல்லாம் இந்தப்படி சுத்தி செய்துகொள்ளல் வேண்டும்.

279. படிகார செயநீர் படி அளவு எடுத்து அதில் மூன்று நாள் ஊறப்போட்டு உப்புக்கல்லை எடுத்துக் கொண்டால் சுத்தியாகும்.

### பூ நீர் சுத்தி

280, 281. சுத்த ஜலத்தில் படிகாரம் தகுந்தபடி போட்டுக் கலக்கி எடுத்துக்கொள்ள. இந்த நீர்படி யொன்றில், பத்துப் பலம் or 350 grams பூ நீர் போட்டுக் கரைத்து, மூன்று நாள் வைத்து, சூரியன் வெப்பத்தில் வைத்து நீர் சுண்டின பின் எடுத்துக்கொள்ள. இந்த மாதிரி 10 தடவை செய்தலால், பூ நீர் தவளம் போல் நல்ல வெண்ணிறமாய் குற்றமற்ற தாகிவிடும்.

"காரந்தானில்லத்துண்டு" என்பதும் தகுந்த தாகும். நாம் போட்டுக்கொள்ளும் கல் சுண்ணம்பு நீற்றின நீர். இதில் தகுந்த அளவு சீனக்காரம் கலந்த நீரில், பூ நீரை போட்டு ஊறவைத்து வெய்யிலில் வைத்து நீர் சுண்டின பின் எடுத்துக்கொள்வது நல்ல சுத்தியாகும்.

282. சூரியன் கதிர்பட்டு நீர் சுண்டி பூ நீர் காரமேறி நீறும் பக்குவம் செய்யவேண்டும். இந்த மாதிரி மறு படியும் கார நீர் விட்டு, மடக்கி, மடக்கி 10 தடவை செய்துவிடல் வேண்டும். அப்பொழுது பூ நீர் காரமேறி சுன்ன பக்குவத்திற்குத் தகுந்த நிலையை யடையும். இந்த மாதிரி 10 தடவை செய்யும் தொழிலை தச தீட்சை என்று கூறப்படும்.



### எந்த நிலமேனும் எழுபிறப்பே வேண்டுமெனல்

ஐந்து நிலமேழுபிறப் பெந்த நிலமாகி
லிந்திர நிலவுப்பரிய யெந்த நிலங் காண்கில்
விந்தை வனங்கற்களது வீறுஞ் ஜலமூறு
மந்தலவணம் புனல்த ஞன கல்லி தாண்டே 283

### உப்புபூர்க்கு மிடமறிய

பேர் கண்மலையாறு நதி யோர்கரை கடோரு
மேர்கள் வன நாடுருவர் பூர்க்கு நிறவண்மை
தார் புவியிலுப்புகளற் றன்னிறங் கொக்கது போல்
நீர்பெருகி வட்டமதாய் நிற்பது காணுப்பே 284

### உப்பின் வடிவறிதல்

கும்பல் கும் பலாயனேகங் கொக்கு திரட்போலுங்
கம்பிகம்பியாய்ச் சிலது கல்லின் மணி போலும்
நம்புதலுமாயுவர்த நாடதிலுமுண்டு
வம்பிலை காண் சூழ்ந்துமதி யகிலமதிலாண்டே 285

### முடுகுசந்தப்பா

மாநிலந் தனிலுமுவர்கட் காடதுவு
மதியினுப்புவளர் மகிமைகா
ணுநிருப்பதுரு வொளிவு தன்னரிய
யுவர்கட் சூழ்ந்து மதியூசரம்
வானிலுண்டு களர்வாரி போவதுமுன்
வந்துநாடி மதிபூண்டுமே
தோணிற் சத்தி சிவசுரூபந்தன் சொரூபந்
தோன்று மவ்விடமிருப்பதே 286

—நவ. ர. வை. சி. ப. 22 செ.

283. ஐந்து விதமான நிலங்களில், எந்த நிலமானு லும் எழு பிறப்பு ஆனபின் தான் உப்பு நிலையை அடைய லாகும். இதில் இந்திர நில உப்பு அறிந்துகொள்ள வேண்டிய நிலம் காண்பதற்கு, வனங்கள், காடுகளில்,

வீணை ரசாயன உரத் தண்ணீர் கசிந்து, கற்களின் சந்து களில் ஊறலினால் வந்த தண்ணீர், உறைந்து கல்லாகி உற்பத்தியாகும் உப்புக் கல்களாகும்.

284. சில உப்பு இனங்கள் இயற்கையாகவே பூர்க்கும் இடங்களைக் கூறப்படுகிறது. மலை நடுவு, ஓரத்திலிருக்கும் கணவாய், ஆறு, நதி கரைகளில், உப்பு உவர் தண்ணீர் கலப்பால் உப்பு வெண்மை நிறமாய் பூர்த்திருக்கும். களர் உப்பு கலந்த நீர், கொக்கு நிறத்தைப் போல் நீர் பெருகி வட்டமாய் நிற்பது உப்பு உற்பத்தியாகும், பூர்க்கும் இடமாகும்.

285. இந்த விதமாக அமைந்த களர் உப்புத் தண்ணீர் தேக்கங்கள் கோடை கால சூரிய வெப்பத் தாக்குதலால் கும்பல், கும்பலாய் திரண்டு, கொக்கு நிறம்போல், சிலது கம்பி கம்பியாகவும் சில கல்மணி போலும், அந்தந்த நாடு, தேசங்களில் உவர் காடுகளில் திரண்டு உருவாகுவ துண்டு. பூமண்டலத்தில் ஆங்காங்கு இந்த விதமான உப்பு கிடைப்பதுண்டு.

286. மாநிலத்தில் உவர் காட்டில் சந்திரனது பனி நீரினாலும் உப்புப் பூர்த்து உருவாவதுண்டு. சமுத்திரத் தண்ணீரினால் களர் நிலத்தில் பூர்த்து உருவாவதுமுண்டு. மழைத் தண்ணீரினால் உவர் பூமியில் உப்பு உருவாவ துண்டு. சத்தி சிவ சுரூப காரசார உறவு கொண்ட பூமி தனில் உற்பத்தியாவதாகும்.

## பாரையுப்புத் தயாரிப்பு

### வெண்பா

பனி வீசு மாசிதனில் பங்குனியிலு மிறங்கும்
தனியாக சுத்த சலந்தான் பிடித்து—பனியது நீர்
வெண்ணிறமாய் நின்ற தொருமேதினி பீங்கானதிலும்
நண்பெறவுஞ் சுத்தசல நாட்டு 287

ஞா. வெ. ப. 139 செய் 971



இந்திரன் தன் விந்ததனி லிட்டிடுங் கற்சுண்ணமது
வெந்த சுன்னக் கல்லிறைந்துவே குமே—இந்திர நீர்
பட்டு விடுமே கறைத்து பாறையுப்பு மூன்றதனால்
இட்டுமஞ்சே தினத்திலெய்தும் 288

நீரது மெப்படியும் நேர்மை நிலவுப்பதுவாய்
பாரதின்மேல் கத்தி கொண்டு பாச்சினால்—நீரதின்மேல்
கண்டதனைக் கீறிட கல்லுப்பு மேல்படியும்
மண்டலத்திற் பாறையுப்பா மறி 289

. ஞா. வெ. ப. 139 செ. 973

287. மாசி, பங்குனி மாதங்களில் பனி நீர், சுத்தமான ஜல மென்று அங்கீகரிக்கப்பட்டிருக்கிறது. அந்தப் பனி நீரை வெண்ணிறமான பீங்கானில் சேர்த்து வைத்துக் கொள்ளல்.

288. இத்தகைய பனி நீர், இந்திரனது விந்துவாகும். கற் சுன்னக்கல், சுண்ணும் பாக்கிய சுற் சுன்னக் கல்லை, இந்த நீரில் போட, இறைச்சலுடன் வேகும். பின்னர் நன்றாய்க் கறைத்து ஐந்து நாள் வைக்க.

289. நீர் நேர்மையான நில உப்பாகும். மேலே கட்டிய ஆடை போன்ற உப்பு கல்லுப்பாகும். இதுவே பாறையுப்பா மென்று அறிந்துகொள்ள.

**நூ. ஆ. விஞ்ஞான விளக்கம் :** சுக்கான் கல் பாறை ...ல் கசிந்த ரசாயன உற பூ நீரினால் உற்பத்தியான சுண் ணும்புக் கல் என்பது சித்த விஞ்ஞான ரசாயன விளக்க மாகும். மாசி, பங்குனி மாதங்களில் விழும் பனிநீர், காரசாரம் கலந்த சுத்த ஜலமாக எடுத்துக் கொள்ளப் பட்டிருக்கிறது. இந்த பனிநீர், வெண்ணிறமான பீங்கானில் பூமி சம்பந்தப்படாமல், மேலிடங்களில் வைக்கப்பட்டு சேர்த்து எடுத்துக் கொள்வது பழக்கத்தி லிருந்து வருகிறது. இந்த காலத்து மழை நீரையும் பிடித்து வைத்துக் கொள்வது சுத்த ஜலமாகும். இந்த

சுத்தமான தண்ணீரில், நன்றாய் வெந்த சுண்ணாம்புக் கல் போட்டவுடன், இரைச்சலுடன் வேகும். இந்த சூடு தணிய 2 அல்லது 3 நாள்கள் அப்படியே விட்டுவிட வேண்டும். பின்னர் நன்றாய் கரைத்து வைத்தல் வேண்டும். மேலே படியும் தெளிவு நீர் காரசார உப்பு கலப்பானதால் மேலே உப்பு பூர்த்து மிதக்கும். நீர் சுண்டி, சூரியன் வெப்பக் கதிரினால் பூர்த்த மேல் உப்பு கல்லுப்பு இனத்தைச் சார்ந்ததாகும்.

கோடை காலத்தில், மழையினால், பூமி உவர் சத்து கலப்பினால், சில இடங்களில் பூமியின் கீழ் வெட்டினால் உப்புக்கல் பாறை கட்டிகளாக அகப்படும். அவைகள் பாறையுப்பு இனத்தைச் சேர்ந்தது. பூமி, நிலத்தின் மேல் பூர்த்து இருக்கும் உப்பு நிலவுப்பு என்றும் எடுத்துக் கொள்ளப்படும்.

சந்தேகம் : கோடை காலத்தில் பனிநீர் எப்படி சேகரிப்பது, என்பதும் யோசனைக்குரியது. கோடை காலத்து மழை சொற்ப காலத்தில், சிறு தூறல் பனி நீராகவும், இடி மின்னலுடன் வேகத்துடன் மழை பொழிவதும் இயல்பு. இந்திரன் நீர் எனவும் கூறப்பட்டுள்ளது. சில உவர் உப்பு மண் நிலத்தில் பொழிந்த மழை ஜலமானது உப்பு ஜலத்துடன் கலந்து கொஞ்சம் ஆழத்தில் ஒன்று சேர்ந்து, கோடை சூரியவெப்பமும், பூமிவெப்பமும் சேர்ந்து தாக்கும் வேகத்தால் உப்பு பாறைகளாகவும், பரும் கட்டி உப்புகளாகவும் அகப்படுகிறது. முன் காலத்தில் சில இடங்களில் கிணறுகள் வெட்டும் போது கீழே உப்பு கட்டிகள் அகப்படுவதுண்டு. இப்படி அகப்படுவது பாறையுப்பு இனத்தைச் சேர்ந்தவைகளாகும். நிலத்தில் அகப்படும் உப்பு இப்படி கீழே கிடைப்பது பாறையுப்பின் இனத்தைச் சார்ந்தது.

கோடை காலத்தில் தான் பூமி கிரகிக்கப்பட்ட உப்பு மேலே பூர்த்து உப்பு கல்களாக பொரிந்து கிடக்கும்.



சில இடங்களில் இப்படி கிடைக்க சந்தர்ப்பமுண்டு. இப்படியும் மேலே பொரிந்து பூர்த்து கிடைக்கும் உப்பு கல்லுப்பின் இனத்தைச் சார்ந்ததாகும்.

### முப்பு

### உப்பின் கசடு ஊறல் குற்றம் நீக்கப்படவேண்டும்

உப்பின்கசடது போய் வூறலது மாறினதால்
முப்பு சுன்னமாவதற்கு மூன்றுபேர்—உப்பதனால்
கற்பாந்தரங் கோடி காயமிது வலுத்து
சொற்பாயும் வாசியினால் தேகம் 290

—ஞா. வெ. செ. 872

**வெண்பா**

கல்லுப்பின்வாறு கருத்தறியா துண்டுமனு
வல்வினைக்குள்ளாகி மனம் வாடினர்—கல்லுப்பு
வெள்ளைக் கல்லுப்பு வெகுவித மாயாய்ந்தாலும்
உள்ளமதினுண்டென்று வுண் 291

—செ. 870

என்றுமிந்துப்பு யெண் சாணுடலிலிருக்க
கண்டுமறியாதென்ன காரணமோ—என்றுமறி
வாரியமுரியதை வன்னியிட்டுக்காய்ச் சியபின்
வீரிய மாயானுணரு மெய் 292

—ஞா. வெ. செ. 871

291. கல்லுப்பின் இனவகை பாகுபாடு கருத்தறியாது உண்டு வல்ல வினைகளுக்குள்ளாகி மனம் நொந்து வாடினார்கள். கல்லுப்பு, அதுவும் வெண்மையான கல்லுப்பு, வெகுவிதங்களாக ஆராய்ந்தாலும், உள்ளமதில் உணவினாலும் அடக்கம் பெற்றுளது.

292. எண் சாண் உடலாகிய நமது தேகத்தில் இந்தவுப்பு அடக்கம் பெற்றிருக்க, அதைக் கண்டு அறிந்து கொள்ள முடியாமை என்ன காரணமோ குளிர்ந்த கடல்

தண்ணீரை, நெருப்பிலிட்டு காய்ச்சியபின் வீரியமுடையதாக ஆகிவிடுகிறது. மெய் யென்பதை உணரக் கடவாய்.

290. அத்தகைய உப்பின் கசடுகள் நீக்கி, ஊறலும் மாறிவிட்ட படியால், முப்பு சுன்னமாவதற்கு, மூன்று பேர் கொண்ட பொருள்கள் சேர்க்கையாகும். உப்பின் ரசாயன தயாரிப்பு மருந்தினல் தேகம் வலுத்து, கல்பமாகி, கல்பகால ஆயுள் நீடிக்கப்பட்டு, வலுவடைந்து விடும். இத்துடன் வாசி யோக சாதனத்தால் சொல்பாயும் பேரின்ப மெஞ்ஞான நிலையையும் அடையலாகும்.

**வி. வி.:** ஒரு உப்பில் மூன்று பேர் அடக்கம் பெற்றுள்ள ரசாயன விஞ்ஞான தன்மை கூறப்பட்டுள்ளது. சமுத்திர தண்ணீர் காய்ச்சி உப்பெடுத்து, கட்டி சுன்னமாக்கி, கல்பம் ரசாயன முறைப்படி உண்பதால் கல்பாந்தர வெகுகாலம் நீடித்து இருக்கவும், வாசி யோக சாதனையால் பேரின்ப பதமடைதலும் கூறப்பட்டுள்ளது. விஞ்ஞான ரகசியம் அடங்கிய பாகமாகும்.

கல்லுப்பு (ப. ர.)

வெட்டிஞான மாயிரத்தைந் நூறில்
விரித்துமே உரைத்திட்டதோர் கல்லுப்பு
கட்டியாகவே காணும் கடற்குள்ளே
கதிரவன் நன்கருணை விதத்தினல்
கெட்டியான கல்லுப்பு கட்டினல்
கேவலம் மினியில்லை யிப்பூவினில்
அட்டியே தினிமுப்பு முடிந்திடும்
அம்மை வாலையருளினு லாண்டையே 293

மங்கையர் மகுடமன்னர் மதித்திடு மந்தமுத்தும்
பொங்கிடும் சிப்பியாக அகரநீர் நடுவேயாழி
மூங்கியே எடுக்கும்போது முத்தினும் ஜோதியென்னக்
கங்கையிற் கிட்டும்கிட்டும் அத்தகல்லுப்பிதாண்டையே
294



“ஞானவெட்டி 1500” நூலில் விரிவாக கூறிய கல்லுப்பு, கடலுக்குள் கட்டியாகவே காணப்படும். சூரிய பகவான் கதிர்கருணை தாக்குண்ட விதத்தினல், கல்லுப்பு கெட்டியாய் விடுகிறது. கட்டிவிட்டால், கேவலமென்பதில்லை. இப்பூமண்டலத்தில் தடையேது. அம்மை வாலையருளினல் முப்பு முடிந்துவிடும்.

**ஆ. வி.:** மகுடந்தரித்த மன்னர்களும், மங்கையர் சீமாட்டிகளும், பெருமதிப்புக் கொடுக்கும் அந்த முத்து, சமுத்திரத்தின் மத்தியில், பொங்கி சிப்பியாக கிளம்பி, அகரநீர் திவலை விழுந்ததும் முத்தாக விளைந்திடும். அந்த முத்துச்சிப்பியை எடுக்கும்போது, முத்தைக் காட்டிலும் சோதிப் பிரகாசமானதும், சிறந்த, மேலானதுமான கல்லுப்பு சமுத்திரநீர் கீழ் கிடைக்கும். இதுதான் மேலான, முதல்தரமான கல்லுப்பு.

வெடியுப்பு காய்ச்சல் தயாரிப்பு

பூநீர் (ப. ர.)

கங்குல்விடியாமே கதிபெறவும் காத்திருந்து
பொங்கியதைத் தானெடுப்பார் பூதலத்தில்—தங்குமது
மாசியிலும் சித்திரையும் மன்னுபங்குனிதனிலும்
மாசறு பூநீரை மதித்து 295

உவற்சாரம் என்றே ஒதிவரும் பூநீரை
எவர்க்காயும் தோற்ருது இவ்வுலகில்—சவர்க்காரம்
கண்டாரே கண்டார் கலிவிலக வண்ணுரே
அண்டாருக்காகாதது 296

கண்டுகொண்டு களர் நிலமதனில்
பண்டு நின்றபடி யந்தத் தாயினை
மொண்டுவந்து முழுவதும் காய்ச்சினல்
விண்டஉப்பும் வெடியுப்பு மானதே 297

வேண்டிய கதியின் நிமித்தம் இரவெல்லாம் காத்திருந்து, சூரியன் விடியுமுன்னே, பூதலத்தில் பொங்கி கிளம்பியிருப்பதை தானெடுப்பர். மாசி, சித்திரை, பங்குனி மாதங்களில், மதிப்பு வாய்ந்த மாசில்லா, தங்கின பூநீரை எடுப்பர்.

உவர்மண் சாரம் என்று ஓதிய பூநீர், இவ்வுலகில் எவர்க்கும் ஆய்ந்து எடுக்கத் தோணுது. சவட்டுமண் காரம் சவர்க்காரம், கலிவிலக வண்ணார் தங்களுடைய ஆதாயத்துக்காக, கண்டு கொண்டிருக்கிறார்கள். உளவறிந்து ரகசிய ரசாயன நோக்குடன் அண்டாதவர்களுக்கு ஆகாத பொருளாகும்.

### வெடியுப்பு

களர்நிலத்தில் உற்பத்தியாகும், களர் காரத்தை தெளிந்து கண்டுகொண்டு, தாய்த்தன்மை படைத்த நாதநீரை, மொண்டுவந்து காய்ச்சினால், அதில் கிடைக்கும் உப்பு வெடியுப்பாகும்.

### கல்லுப்பு யினவகை.

உப்பென்று லுருவானவுப் பேதுகாண்
செப்பினார் தெட்சணயன ருளினால்
கைப்புமாறிக் கடல்நுரைக் கட்டியும்
வைப்புக்காண் கடல்வாரிக் கல்லுப்பதே
அமுரியுப்புமப் பூவுங்கடற்சலம்
அமுரியுப்புமடி மூலம்புக்கினால்
அமுரியுப்புமம் மண்ணதில் பூர்க்குமாம்
அமுரிமூலமதித சுன்னங்களே 298

—ஞா. வெ.

அலைமோதிமேரு வுறையாகச்சேர்ந்து அருணன்பட
மலைமேவியுப்பு நிலைவிந்துவீதி வாருதியால்
கலையாமீரெட்டு சலநீருங்கட்டிக் கல்லுப்பதாய்
விலைமேவிசோனகர் பெரியோர்கள்வாங்கும் விற்பனையே
299



சித்தர் தெட்சணயன், வள்ளுவர்மீது அருள்புரிந்து, உப்பென்றால் உருவான உப்பு எது என்பதை சொல்லியிருக்கிறார். உப்பின் கைப்புமாறி உருவான கடல் நுரை கட்டியாகும். இது ஒருவகை சமுத்திர தண்ணீரின் வைப்புச் செய்கையால் தயாரிக்கப்படும் கல்லுப்புக்கு சமானமாகும்.

சமுத்திரசலத்தில் ரசாயன உறம் அடக்கம்பெற்று அமுரி என்னும் பதமாகி உப்புத்தன்மை அதிகமாய் ஏற்பட்டு மண்ணில் கலந்து, ஒருவிதமான உப்பாக பூர்க்கும். அத்தகைய சமுத்திர நீர்உற அமுரி உப்பு மூலத்தால் அதிக காரம் பொருந்திய சுன்னங்கள் செய்யப்படும்.

சமுத்திரத்தில் மலைகள் ஆங்காங்கு காணப்படும். சமுத்திர உப்புநீர், சூரியன் வெப்பம், காற்றினால் அலைகளாகி, அந்த மலைக்கல்களில் மோதிமோதி உப்பு உறைந்து கல்லாகி, கெட்டியாகி, கட்டியாக, உருவடைந்து, உதிர்ந்து, சமுத்திரத்தின்கீழ் பாறையாகிக் கிடக்கும். இது மதிப்பு வாய்ந்த கல்லுப்பு எனப்படும். முத்து எடுக்க மூழ்கிக் குளிக்கும் தொழிலிலீடுபடும் சோனகர் என்னும் இனத்தவர், சமுத்திரத்தின் கீழிருந்து எடுத்துக் கொணர்வர். இந்த உப்பை விலை கொடுத்து ரசாயன கல்ப சுன்னவகை தயாரிப்புக்காக பெரியோர்கள், விஞ்ஞானிகள் வாங்கிப்போவார்கள்.

### ஒரே உப்பில் இணைந்த மூன்றுபூத முப்பு

எண்ணத் தொலையாது ஏரிநீர் மேவியபேர்
பண்ணத் தொலையாத பாதகர்தம்—விண்ணதிலே
தானெடுங்கித் தாரையாய் தவத்தோருக் காய்விழும்
வானுதகம் வந்த திதுவாம் 300

இந்த விந்தினை யாரறிவார்கள் காண்
மந்தமாருத மானதும் வன்னியும்
சொந்தமாகச் சுருக்கினில் கூடியே
வந்தஉப்பது முப்புவென்றேதிடே 301

ஏரி நீரை நம்பி ஆதாரமாக யிருந்தபேர்கள் எண்ணிக்கைக்குள் அடங்காது. பண்ணத்தெரியாத பாதகர்களாகும். விண் என்ற ஆகாயத்தில் நீர் தானெடுங்கி, தாரைகளாக, தவத்தோருக்காக பொழியும். ஆகாச கங்கை நீர் வந்த வழியிதுவாகும்.

காற்றும், அக்கினியும் தொந்தமாய் கூடி ஒன்றுக் கொன்று பிணைப்பு சுருக்கிட்டு கலந்த தன்மையால் விளைந்த உப்பது, முப்புவென்று சொல்வாயாக, இப்படி உருவான விந்தையை யாறறியப்போகிறீர்கள். காணவும் அரிது !

ஆ. வி. முப்பு—மூன்று பூதங்களின் உறவாடின சேர்க்கையால், ஆகாய மண்டலத்தில் சேகரிக்கப்பட்டு, மழை தாரைகளாக பொழிகிறது. உவர்மண் சம்பந்தத் தால், உப்பாக விளைகிறது. இந்த உப்பில், மூன்று பூதங்கள் சேர்ந்து உற்பத்தியான விந்து உப்பாகும். ஆதலால் இந்த ஒரு உப்பிலேயே மூன்று அடக்கம் பெற்றுவிட்டது. இதை முப்பு என்று, சித்தர் விஞ்ஞான ரசாயனக்கலை மறைப்படி ஓதிடவேண்டும். "ஓதிடே" என்னும் பதம் விஞ்ஞான அர்த்தபுஷ்டி நிறைந்தது என்பதை உணர்தற்குரியது.

குறள்
வானின் றுலகம் வழங்கி வருதலால் 11
தான் அமிழ்தம் என்றுணரற் பாற்று
விண்இன்று பொய்ப்பின் விரிநீர் வியன் உலகத் 13
துண்ணின் றுடற்றும் பசி



விசும்பின் துளிவீழின் அல்லால்மற் றாங்கே
பசும்புல் தலைகாண் பதரிது 16
தானம் தவம்இரண்டும் தங்காவியன் உலகம்
வானம்வழங் கா தெனின் 19
நீர்இன் றமையா துலகுஎனின் யார்யார்க்கும்
வான்இன் றமையா தொழுக்கு 20

உப்பினிற் காரசாரம் உவர்நீருமுவர் மண்ணுப்புஞ்
செப்பிய சுக்காறோடு சிலாக்கியஞ் சாரமாச்சு
ஒப்பிய நூல்களெல்லாம் ஓதிய முப்பு வாச்சு
இப்பிறப் பறிவிறோர்க்கு இது தெளிவாச்சுதாண்டே 302

போற்றும் புவிநாதம் பொங்கும் கடலுப்பும்
ஊற்று நீர் பாறையுப்பும் உட்கூட்டித்—தேற்றமாய்
கைப்பாகந்தானறிந்து காரணத்தாற் செய்தக்கால்
மெய்ப்பாக முப்பாகுமே. 303

பூமிநாதமெனும் பூநீரதுதான் புகலும் நீலநிறம்
புனிதமுடனதைச் சாடி நீரதில்
சாமிநாதகுரு பரனருளால் அதைத்தான் கலக்கிச்
சாமமூன்று வைத்துத் தெளி விறுத்துக்
காமி வாலையருள் விந்துவையும் கொண்டு தாக்கிக்
கடிதினிற் கூட்டிடு கெங்கையால்
நேம மாகவே பூநீருடன் சேர்த்துச் சமாதிவைத்து
நேரதாகவே எடுத்திடு மாண்டயே. 304

அறிந்தவரே சித்தர்முதல் விஞ்சையர் யோகிகள்
அந்தரர் வித்யாதரர் அவர்கள் ஆனோர்
செறிந்து மணற் பாங்குதனில் செகசோதிநிலமாம்
செனித்ததோ ராணைக்கல் லதனலன்றே
நிறைந்ததோர் பூமிநாத வழலையென்று பூத்திருக்கும்
நிலைதனிலே மெய்மறந்து வீணதாகக்
குறைத்துமே கேட்டார்கள் குவலயத்தில் குண்டலியாள்
குறியறியாச் சண்டாள ராண்டே. 305

உப்புவர்கத்தில் காரம் சாரம் என்பது உவர் நீர், உவர்மண் கலப்பில் உருவாகிய உப்பும், சுக்கான் உடன் கலப்பது சிலாக்யமான சாரமாகும்.' நூல்களெல்லாம் ஒப்புக்கொள்ளும், கூறிய முப்புவாகும். இதன் பிறவி வரலாற்றை அறிந்த பேர்க்கு, தெளிந்தவர்களாய் விடுகிறார்கள்.

இப்படி போற்றும் பூமிநாதம் (பூநீர்) பொங்கும் கடலிலிருந்து உற்பத்தியான உப்பும், பாறையுப்பும் உடன் கூட்டி, கைப்பாக முறை செய்பாகங்களறிந்து, காரண விஞ்ஞான வழிபாடுடன் செய்தால் முப்பாகும்.

பூமி நாதம் என்று கூறும் பூநீர், நீலநிறமாகும். நீர் பூத்த நீலச் சாயல் நிற பூ நீரை வாரியெடுத்து, நீரில் சாடி கலக்கி சாமமூன்று வைத்து, தெளிவை யிறுத்து எடுத்துக் கொள்ளல் வேண்டும். இதனால் முதலில் பூநீர் வாரி எடுத்த கசடுகள் கலப்பு நீங்கி விடுகின்றன. இதை விந்துவுடன் கலந்து தாக்கி, நியம விதி விஞ்ஞான தந்திரக் கிரியைப்படி, நீரில் கலக்கி உலர்த்தி சமாதியில் வைக்க பூ நீரதுவாகும்.

இத்தகைய சித்த ரசாயன விஞ்ஞானக்கலை அறிந்தவர்கள், சித்தர்கள், விஞ்சையர் யோகிகள், அந்தரர், வித்யாதரர்கள், ஆனோர்கள், செறிந்த மணல் பாங்கான நில பரப்பில், செகசோதிமய நீலச்சாயல், செனிக்கும் ஆனைக்கல் சம்மந்தத்தால், பூமிநாத வழலை பூர்த்து காணப்படும். மெய்மறந்த நிலையிலே, மதிப்புக் குறைவாக கேட்பவர்கள். பூவுலகில் பூமிநாத குண்டலியாள் குறி தெரியாதவர்கள் சண்டாளர்களாவர்.

பூநீர் விளையும் நிலவளம், வர்ண பேதம்
போக்கினைத் தெரிந்து மூவர் பூத்த மண்ணிலத்திலே
நோக்கிடவே நீலவானம் நுட்பமீது வெண்மையை
நீக்கியே எடுத்திடில் நிச்சயம் கைகூடிடும் 306
மூக்கியம் நிலவளத்தை முன்பு நீ அறிந்திடே



அறிந்த நீலஉப்பதும் ஆண்டையே பூ நீரது
சிறந்தநீல உப்பை நீக்கிச் செய்யவீண் பாடாகுமே
உறைந்த பஞ்ச வர்ணமாம் உப்பதில் விளைந்தது
நிறைந்த நீல உப்புவென்று நிகழ்த்தினேன்
[கோளாண்டையே 307

உப்புடனு மானைக்கல்லை ஒதியாறு திங்களாய்
வைப்பறிந்து வைத்த காடி வானநீரில் சுத்தியாம்
செப்பிய விரைந்து தீக்ஷை சீருடன் முடித்திடில்
கைப்பு நின்ற கசிவு நீங்கிக் காரசாரமானதே 308

காரசாரமான உப்பை கருதிமுன்னம் சாற்றிய
பாரஞான வெட்டி தன்னில் பகர்ந்தனம் நல்முப்பு வென்று
தேறசொற்பதத்தைக் கண்ட தீக்ஷையின் பெருமையால்
பாரில்முப்புவை முடித்துப் பார்த்தனர் சிவயோகரே 309

உவர்மண் நிலபரப்பில் பூர்த்திருக்கும் போக்கினை தெரிந்து, பார்த்தாக்கால், வெண்மையும் நுட்பமான நீல வர்ண நிறமுடயை பூவினில், வெண்மையை நீக்கி எடுத்துக் கொண்டால் நிச்சயம் கைகூடிவிடும். முக்கியமாய் நிலவளத்தை முதலில் நீ கண்டறிதல் வேண்டும்.

அப்படி அறியப்பட்ட, உவர் மண்ணில் பூர்த்த, நீல வர்ணச் சாயலுப்பை நீக்கிச் செய்ய வீண்பாடாகும். ஐந்து வர்ண ரூப பேதத்தில் உப்பு விளைகிறது. காரசார, உறம் நிறைந்தது நீலச்சாயல் வர்ண உப்பு என்பதை உணர்த்தப்பட்டது.

உறைந்த உவர் மண் பூவிலிருந்து பூமி நிலவளம் ஆய்ந்து தெளிந்து சேகரித்த பூநீரை உப்பாகச் செய்யும் வைப்பு மார்க வழிபாடுகளை அறிந்து கொள்ளல் வேண்டும். வான நீரில் சுத்தி செய்ய வேண்டும். பின்னர் ஆனைக் கல்லுடன் உப்பு சேர்ந்த காடி, ஆறு திங்கள் வைத்து சேகரித்தல் வேண்டும். இப்படியாக பத்து தீட்சைகள், மடக்கி, மடக்கி, காரம் ஏற்றி பதும்

செய்ய வேண்டும். இப்படிச் செய்வதால் உப்புக்குக் கசிவு நீங்கி, காரசாரமான ரசாயன உன்னத நிலையை அடையும்.

இந்த "நவரத்ன வைத்திய சிந்தாமணி" நூலுக்கு முன்னால் ஞானவெட்டி 1500 நூலில் நல்ல விதமான முப்பு பாகத்தைப் பற்றி கூறியிருக்கிறேன். அந்த பாகத்துக்கு வேண்டிய காரசாரமான உப்பு, இந்நூலில் கூறிய கருத்தின்படி செய்த காரசாரம் உறமேற்றப்பட்ட, தசதீட்சை விதிப்படி முடித்த உப்பாகும். சிவயோக விஞ்ஞான மேதாவிகள், இத்தகைய முப்புவை முடித்து பார்த்தவர்கள் என்பது நூலாசிரியர் குறிப்பு. (தி.வ.)

14 பிரிவு 3

## சித்தர் முப்பு ரசாயன விஞ்ஞான விளக்கம்

ஆ. வி.: சித்தர் மொழி தமிழ். மொழி மறைப் பரமசிவப் பெருமான் பரமாசார்யனாகி, தனது அம்ச பூதர்களான சித்தர்களால், தமிழ்மொழி கலைகள், உலகப் பெருமக்கள் நலன் கருதி, அருளப்பெற்றது. சித்தர் கோன் அகத்தியருக்கு யிட்ட ஆக்ஞைக்கிணங்க தமிழ் மொழி மறை இலக்கணம் முதலியன அகத்தியரால் வெளி வந்த காரணமாக, சித்தகத்தியம், பேரகத்தியம் என்னும் மொழிமறை இலக்கணம் நூல் வடிவில் கொண ரப்பட்டது. அதனால் நமது தமிழ்மொழிக்கு அகத்தியர் மொழி எனவும் பெயர் வழங்குவதாயிற்று.

அத்தகைய தமிழ்மொழி மறைசித்தர் காலம், சங்க காலங்களில், உன்னத இலக்கிய, இலக்கண விஞ்ஞானச் செருக்குடன் விளங்கிவந்திருக்கிறது. ஈசுவரத்தன்மை யடைவதற்கு வேண்டிய சித்திகளை அடைய சாதனங் களான, கலை விஞ்ஞானங்கள், உலகப் பெருமக்கள் நலங் கருதி நூல்வடிவில் வெளியிட்டிருக்கிறார்கள். மா மகத் துவம் பொருந்திய சித்தர்முதன்மையாக, பின் சந்ததி



மாணாக்கர்கள் சித்தர் பரம்பரையாகவும், தங்களது அனுபவ ஆராய்ச்சி விஞ்ஞானக் கலை ரகசியங்கள் நூல் முகமாக, வாழையடி வாழையென வந்துகொண்டிருக்கிறது.

அத்தகைய கலை விஞ்ஞானங்களில் தேக சித்திக்கு ஆதாரமான மருத்துவ ரசாயனக் கல்ப விஞ்ஞானக் கலையும் முக்கியத்துவம் வாய்ந்ததாகும். இதனுடன் இணைந்து பயிற்சி பெறவேண்டிய யோகம், வாசியோக விஞ்ஞானம், மந்திரம் முதலியனவும் அடங்கும். இதற்கிணங்க மகா மகத்துவம் பொருந்திய, தெய்வத்தன்மை வாய்ந்த சித்தர் திருவள்ளுவ நாயனார், மருத்துவ விஞ்ஞானக் கலை களஞ்சியத்தில், பேரின்பம், சிற்றின்பம் இரண்டிற்கும் இடையூறாக இருக்கும், தேகக் கோளாறு, வியாதி, பற்பல பிணிகளுக்கும், பலவித சிகிச்சை கிரம வழிகளும் கூறப்பட்டுள்ளது. சிற்றின்ப உலக மக்கள் பிணிகளுக்கு உபயோகப்படும் மருந்து சிகிச்சைகளாகும் பேரின்ப மெய்தும்பொருட்டு, அதற்கு வேண்டிய ஆயுள் ஆரோக்யம், தெய்வத்தன்மை, அதிமானிட சக்தியை யளிக்கவல்ல, மருந்து, சிகிச்சை, கிரியை வழிமுறைகளும், தங்களது அனுபவங்களையும் ஆராய்ச்சிகளையும் அருளியிருக்கிறார்கள்.

அத்தகைய மகத்துவம் பொருந்திய சித்தர்மருத்துவ விஞ்ஞானக் கலை உயர்தரமான மேல் ஆராய்ச்சி வகுப்பில் முதல்தரமானதாக கருதப்படுவது முப்பு என்னும் கல்ப மருந்தாகும். சித்தமருத்துவ விஞ்ஞானக் கலையானபடியால், இந்த 'முப்பு' என்னும் பதத்தில் அடங்கப்பெற்ற மொழி விஞ்ஞான ஆராய்ச்சி இங்கு எழுத அவசியமாயிற்று.

இலக்கியம், இலக்கணம், விஞ்ஞானம் என்னும் மூன்று பிரிவு, ஒன்றிற்குமேல் ஒன்றாக இணைந்த பதமாகும் 'முப்பு' என்பது.

"உப்பில்லாப் பண்டம் பாழ்" என்கிற உலக மூதுரைப்படி, எந்த வஸ்துவானாலும் உப்பு சேர்க்கா விட்டால் அந்தப் பண்டம் பாழடைந்துவிடும் என்கிற உண்மை நன்கு விளங்கும். நாம் தினம் சாப்பிடும் ஆகாரங்களில் உப்பு சேர்த்து உபயோகிக்கிறோம். இரண்டாவதாக ஊறுகாய் வத்தல் முதலிய தின்பண்டங்களில் உப்பு போட்டு கலந்துவைத்தால்தான் வெகுநாள் கெடாமல் இருக்க முடியும். இந்த ரகசியம் ஆகார சமையல் விஞ்ஞான திறமை பெற்றவர்கள் நன்கறிவர்.

"உப்பிட்டவரை உள்ள வரை எண்ணு" எனும் பதமும் விசேஷ ஆராய்ச்சிக்குரியதுதான். உலகில் உப்பு என்னும் பொருள் அழியாது நிலைத்திருக்கும் ஆதாரப் பொருளாகும். அத்தகைய உப்புடன் கலந்த ஆகாரப் பொருள் அளித்து உதவியவரை, தேகம் இருக்கும்வரை நீண்ட காலம் நிலையாய் எண்ணுதல் வேண்டும். இன்னும் இதில் விசேஷ விஞ்ஞான ஆராய்ச்சியில் விளங்கும் அர்த்தபுஷ்டியுமுடையதாகும். இன்னும் இதைப்போல் இலக்கிய மூதுரைச் சொற்களும் சில உள. -உப்பு ருணம் விடாது'. இலக்கணப்படி ஆராய்ச்சி செய்யுங்கால், "முப்பு" என்னும் சொல் மூன்று எழுத்துடையது. 'மு' என்னும் எழுத்து உயிர்மெய்யெழுத்தாகும். இதில் 'உ' என்ற உயிரெழுத்தும் 'ம்' என்ற மெய்யெழுத்தும் இணைந்த உயிர் மெய்யெழுத்தாயிற்று. உலகில் எல்லா சீவகோடி உற்பத்தியாவும் உடல் உயிர் கலப்பினால்தான் வாழ்ந்துவருகிறோம். எல்லாவகை பிராணிகளிலும், இந்த இரண்டு கலப்பில்லாமல் பிறவியில்லை. தமிழ் மறைமொழி இலக்கணப்படி உடலும் உயிருமாகி, உயிர் மெய்யெழுத்தாக, ஆரம்ப முதன்மையாக எடுத்துக்கொள்ளப்பட்டது. உயிரெழுத்துமாத்திரம் எடுத்துக்கொண்டால் 'உப்பு' என்னும் சொல்லாகி, இரசாயன விஞ்ஞானப் பொருளாய் அமைந்துவிட்டது.



மெய் கலந்த 'மு' பதத்திற்கு உப்பு உயிர் சீவபதமாகும். அதனால் 'முப்பு'வுக்கு உயிர் 'உப்பு' என்பது விளங்கும்.

உயிர் மெய் 'மு' என்பது மூன்று எண்ணை குறிப்பதாகும். இதனால் மூன்றுவித உப்பு என்பதும் அறிதற்குரியது. இதற்கு ஆதாரமாக சித்தர் திருவள்ளுவர் 'ஞானவெட்டியான்' நூலாதாரம் உணர்வதற்குரியது.:—

"முப்புவு மூன்றல்லோகாணும்—மூல—
வாசிசேரவுநாலுமுடிவல்லோ தோணும்
அப்பும் உப்பும் வெடியுப்பும்—அக—
வானது வாயறிந்தவர் செப்பார்" தனன

ஞா. வெ. ப.134. செய் 927.

மேலே கூறிய செய்யுள்படி 'முப்பு' என்பது மூன்று உப்புகள் என்பது புலனாகும்.

உப்பு என்னும் உயிர் பதப்பொருளுக்கு ஆதாரமும், உயிர் மெய்யெழுத்தாகிய 'மு' என்னும் எழுத்திலேயே அடக்கம் பெற்றுவிட்டது. அதாவது 'ம்+அ+உ', 'ம்+அ=ம+உ=மு' என்கிற தமிழ்மொழி முறை இலக்கண இணைப்புப்படி 'அ' என்ற எழுத்துடன் பதச்சொல் அப்பு என்பதாக அமைதலாகும். இதன்படி உப்புக்கு முன்னால் 'அப்பு' என்னும் பதம் அடங்கிவிட்டது. அப்புவாகிய தண்ணீரிலிருந்து, 'இரசாயன விஞ்ஞானப்படி பூநீர் என்னும் காரசார நீரிலிருந்து உருவாகும் உப்பு சேகரித்தலாகும்.

"உப்புமயமப்புமய மோகோகோ நாதவிந்தின்மயம்
இப்புவியெல்லாஞ் செனித்த இந்திரிய வாழ்க்கைமயம்
கைப்பதுவில்லாமல் செகங்கண்டதென்ன காண்கிலென்ன
முப்பது காணுதியிலு முடித்து வைத்தாரீசனுமே"

ஞா. வெ. ப. செ.

சித்தர் திருவள்ளுவ நாயனார் 'முப்பு' என்னும் விஞ்ஞான பதத்தில் அடக்கம்பெற்ற பொருள்கள் மூன்றுவித

ரசாயன இணைப்பு தத்துவத்தை விளக்கமாகக் கூறியிருப்பது சந்தேகத்திற்கு இடங் கொடுக்கவில்லை. ‘அப்பு’ என்னும் ரசாயன உரம் ‘நாதவிந்தின் மயம்’ காரசார திரவ உருப்பெற்ற தண்ணீர். இதற்கு விஞ்ஞான ரசாயன பதப்பெயர் பூநீர் என்பதாகும். இந்த பூநீர்பற்றி முன் அத்யாயத்தில் விவரம் காணலாம். சித்தர் ரசாயன தயாரிப்புக்கு, படிப்படியான, அடுத்தடுத்த உயர் நிலை பக்குவத்தையும் உணரலாம். ஆரம்பம் தண்ணீர் பின்னர் காரசாரநீர் அடுத்தபடி பூநீர். 2. இதற்குமேல் உப்பு. இந்த உப்பு உற்பத்தி தயாரிப்பு வகைகளும் உப்பில் சில பிரிவுகளைப்பற்றி உப்பு அத்யாயத்தில் விவரம் காண்க. 3. இந்தவிதம் தயாரித்த மூன்று உப்புவகைகளை சேர்த்து தயாரிக்கும் முப்பு ரசாயனகல்ப மருந்து.

2

‘முப்பு’ சித்தர் ரசாயன விஞ்ஞான மருத்துவக் கலையில் திருவள்ளுவ நாயனுர் அருளிய நூல்முறைகள், அனேக விஞ்ஞான ரகசிய, கிரியை, சரியை, விரிவுரை இலக்கண சிவபதங்களடக்கம் பெற்றனவாகும். அதன் படி ‘முப்பு’ என்னும் பெரும் மகத்தான சிவபத இணைப்பும் உணர்தற்குரியது. முதலில் பூநீர் இரண்டாவதாக உப்பு, மூன்ருவதாக முப்பு என்னும் நிலையை அடைதலாகும். ஒரே உப்பில் மூன்றுவித ரசாயன இணைப்புநிலை.

3

இத்தகைய காரசார உப்பில், மூன்று பூதங்களின் அம்ச உப்பை சேகரித்துக் கல்ப மருந்தாக செய்தல். அப்பு பூத கடல் நீருப்பு, தேயுபூத வெடியுப்பு, பிரிதிவி பூத பூமிநாத பூநீருப்பு. மூன்றுவித உப்புகூடி சேர்த்து சித்தர் ரசாயன மறைவிதிப்படி காரசாரமேற்றி சுண்ணம்,



செய்து, கற்பம், மருந்து ரசாயன மருந்துகள் தயாரிப்பதாகும்.

மூன்று பூத உப்பு இணைந்த முப்பு

அப்புவுடன் வன்னியும் ஆனதோர் காற்றுமே
இப்புவியல் ஏகமாய் இருந்திட—ஒப்பியதோர்
ஆதிவழலை ஆருமே யீதறியும்
சேதியிந் நூலினுற் செய். 310
—பர. 89

பூதங்கள் ஐந்தும் புலனைந்தும் ஒன்ருக
ஏதங்கமின்றி ஏரிபோல்—ஆதங்கம்
நீங்குமொரு வாரிதியாய் நேர்மை யுடனேயிருக்க
ஈங்கு இனி வறுமை ஏன். 311
—பர. 90

சாகர நீரைச் சடுதியிற் ருனறிந்து
பாகமதாயுப்பைப் பண்படுத்திச்—சாக சமதாய்த்
தீக்ஷை தச பத்தும் தீவிரமாய் நீமுடித்துக்
காக்ஷி வழியிலே காண். 312
—பர. 91

சுருதி மாமொழி மூத்திரமெனச்
சொல்லும் சாகர மழுரியே
வருதியேதிதன் மார்கமே கண்டு
வாய்மையாயுல கெய்திருல்
திருமேவி யிழைக்குமே யிதன்
நிட்சயம் பதினென் சித்தர்
சுருதியே செய்த கபடுகண்டவர்
காக்ஷி கூடுவராண்டையே 313
—பர. 92

அப்பு, வன்னி, பூதாம்சமான தண்ணீரும், நெருப்பும் கூடிய வாயு பூதாம்சமாகிய காற்றும், பூமண்டலத்தில் இணைந்து ஏகமாய் இருந்து பாலித்து வர, இவ்வகை

பூத அம்சங்கள் ஒப்புதலுடன், விளையும் ஆதிவழிலே என்பதை அறிந்து, இந்நூலின் செய்திப்ப செய்தலாகும்.

பூதங்கள் ஐந்தும், புலன்களைந்தும் ஒன்ருகி, தங்கு தடையின்றி ஏரிபோல் தண்ணீர் அமுரியாய், நேர்மை யோடு அமைந்திருக்க, இனி வறுமை ஏன். எல்லாவித கஷ்டங்களும் நீங்கிவிடும் எனப்படுகிறது.

சமுத்திரத்தின் அமுரிநீரை, அதன் ரசாயனத் தன்மையைத் தானறிந்து, சீக்கிரத்தில் செய் பாகத் துடன் உப்பாகி, சித்தர் ரசாயன தந்திர விதிமுறைப்படி, பத்து தீக்ஷை செய்து பண்படுத்தி, முடித்து, அந்த காட்சி பின்பற்றிய வழியிலே காண்பாயாக.

சித்தர் ரசாயன விஞ்ஞான மறை மொழிப்படி, மூத்திரம் என்று சொல்வதும், அமுரி யென்று சொல் வதும், சாகரமாகிய சமுத்திரத்தின் நீர். அந்த நீரின் உற்பத்தி விஞ்ஞான மார்க்கங்கள், அருமை, பெருமை, குணவிசேடங்கள் அறிந்து உலக மக்கள் செயல் படுவார்களானல், " திரு " என்னும் தெய்வீகத் தன்மை யும் சகல சம்பத்துகளும் வந்தடையும். இது மகத்துவம் பொருந்திய 18 சித்தர்கள் கண்ட நிச்சயமான சுருதி யாகும். இதை செய்து கிரியா மூலக்கபடு, சித்தர் ரசாயன தந்திரம் கண்டறிந்தவர்கள், தெய்வீகக் காட்சியோடு கூடி பெரும் பேரின்ப பதமடைவார்.

அமுரியுப்புமப் பூவுங்கடற்சலம்—
அமுரியுப்பு மடிமூலம் புக்கினல்
அமுரியுப்புமம் மண்ணதில் பூர்க்குமாம்—
அமுரி மூலமதித சுன்னங்களே 314

உப்பென்று ஆருவானவுப்பேது காண்—
செப்பினர் தெட்சணயனருளினல்
கைப்புமாறிக் கடல்நீரைக் கட்டியும்—
வைப்புகாண் கடல்வாரிக் கல்லுப்பிதே 315

—ஞா. வெ. ப. 150, செ. 1054, 1056



314. அமுரியுப்பு என்று கூறப்படுவது கடல் தண்ணீ ரால் பூர்க்கும் உப்பாகும். உப்புமயமான அமுரி மண் ணின் அடிமூலம் கலந்து சுவர்வதால், அமுரி உப்பாகி மண்ணில் பூர்க்கிறது. அமுரியினல் பூர்த்த உப்பின் மூலம், அதீதமான சுன்னங்களாக்கலாம்.

315. சித்தர் தெட்சணயன் அருள்வாக்குப்படி, உப் பென்ருல் உருவான உப்பு எது காணப்படுவது என்றும் கைப்பு, கசிவுத் தன்மை மாறின கடல் நுரைகட்டியும், வைப்பு செயல் முறையாக கடல் நீரால் உற்பத்தி செய்யப் படும் உப்பு, கல்லுப்பாகும்.

ஆ. குறிப்பு: அமுரி என்னும் பதத்திற்குப் பல ரசாயன கலப்பு உறவு முறையால் அடங்கிய தண்ணீருக்குப் பெயராகும் மருத்துவ பரிபாஷை சொல்லாகும். மருத்துவ ரசாயன உரத் தண்ணீர் வகைகளின் பொதுப்பெயராகும். இங்கு வள்ளுவர் நூலாதாரப்படி கடல் தண்ணீராகிய அமுரி மூலமாகி மண்ணில் கலந்த உவர் கலப்பாகிப் பூர்த்த உற்பத்தியான உப்பாகும். இந்த உண்ணும் சமுத்திர உப்பைச் சுன்னம் செய்தால் அந்த பலன்கள் அடையலாம்.

சித்தர் வள்ளுவருக்குப் பல சித்தர்கள் நூலும் ஆராய்ச்சி யாலும், உபதேசங்களாலும் தான், சித்தர் பதம் பெறலானர். இதற்குச் சான்ருக இங்கு சித்தர் தெட்சணயன் அருள் உப தேசப் படி, உருவான உப்பு எது என்பதை தெரிவிக்கப்படு கிறது. கடல் தண்ணீரின் செயலால் உற்பத்தியின் கடல் நுரைகட்டி, கைப்பு மாறி அமைந்துவிடுவதாலும், கடல் தண் ணீர், உவர் மண் பூமியில் பாய்ச்சி செயற்கை மூலமாய் உற் பத்தியாகி பூர்க்கும் உப்பும் கல்லுப்பாகும் என உணரத்தகும்.

முப்பு இணைப்பு ரசாயன தயாரிப்பு

(வெண்பா)

ஆனைக்கல்லாரறிவ ரம்புவியிலும் மனிதர்
சேனகரா வந்தவித சொர்ண உப்பை—யானைக் கல்
பானமென்ற நீரமுரி பாண்டமதிலும் படியதனல்
தானதைக் கொண்டே கடலைத் தாக்கு. 316

படும் முப்பு ரசாயன உன்னத கல்ப மருந்து என்பதை உணரலாம். 'வெளி முதலாகிய மூன்று' மானிட தேகங் கெட, நோய்களால் தேய்ந்துநசித்துவிட காரணமானது. முக்கியமாக வாயு, வன்னி, வருணன் எனும் காற்று நெருப்பு, தண்ணீர் பூதாம்ச ஏற்றத் தாழ்வான குறை களால்தான் தேய்ந்து போகும் நோய்க்கு இடம் ஏற்படு கிறது. அந்த மூன்று பூத உப்புகளை சித்த ரசாயன தந்திர விதிப்படி, அவைகளின், மலினங்கள் அகற்றி, ஓடாமல் கட்டி, சேர்த்துச் சுன்னமாக்குவது.

ஏன் சித்தர் மருத்தவக் கலை விஞ்ஞானத்தில் உப்பு கல்ப ரசாயனமாக பெருமை கொடுக்கப்பட்டுள்ளது என்பதை சித்தர் திருவள்ளுவர் நூலில் தெளிவுபடுத்தும் ஆராய்ச்சிக்குரிய பொருள் விஞ்ஞானம் அடங்கியுள்ளது. பூமியின் உவர் சத்தினுல், மானிடவர்க ஆகாராதி நெல், பலவித பழவகையரு, கீரை, காய், தானிய வகைகள் உண்டு, மனித உடலில் விந்துநாத சத்து உப்பாகி கருதரிக்கலாயிற்று. சரீர உருவெடுக்கலாயிற்று. கசியுந் தன்மையோடு கூடிய பச்சை உப்பு ரசவர்கமானதால் உடல் அழியும், நசியும் தன்மை வாய்ந்ததாக உளது. அதற்கு திடமான, அசல் தயாரிப்பு, உப்புகளை, ரசதந்திர ரசாயன சித்தர் வழிவிதி முறைப்படி செய்து உட்கொள் வதால், கல்பமாக உடல் நசியாமல் வெகுகாலம் நீடித்து வாழ முடிகிறது என்கிற அடிப்படையில், முப்பு தயாரிப்புகள், தனிப் பெருமை வாய்ந்தனவாக ஆயிற்று.

மேலே கூறிய முப்பு சுன்னம் சாதாரண மத்திய ரக வீரியத்துடன் கூடிய தயாரிப்பாகும். இதற்குமேல், முப்பு சுன்னத்துக்கு காரமேற்றி வீரியசக்தியை பெருக்கு வதற்கு வேண்டிய திட்டக் கிரியைகளை வகுத்துக் கூறப் பட்டுள்ளது.

முப்பு சுன்னம் கட்டத்தை அடைந்தவுடன் ரஸாயன வஸ்துக்களான, வீரம், பூரம், நாபி, குருவண்டு

வேண்டி முப்பொருள், மூன்று வகையான ரசாயன உப்பு தயாரிப்பு சேர்க்கை. இந்த சேர்க்கையில் அமுரி யுப்பாகிய கடல் நீருப்பு, கரையாமல், வெடிக்காமல் கட்டி எடுத்துக்கொள்ளல் வேண்டும். பூநீருப்பு தீட்சை யினால் கட்டுப்பட்டுவிடும். கடல் கல்லுப்பு வெகுவாக கட்டுப்படும் நிலையிலேயே அகப்படும். ஆதலால் சூடன் சேர்த்து வெண்கருவாலறைத்துப் புடம் போட்டு, பணிந்து கலைப்பதம் போற்றி சித்தர்கள் அருள்பெற்று அனுபவிக்க உகந்தது மருந்துகளுக்கு நல்ல ரசாயன முப்பு தயாரிப்பு.

988, 999. உரகாரமேற்றி, சுன்னத்தின் வீரியத்தை அதிகப்படுத்த வேண்டும். அதற்காக, வீரம், பூரம், புனுகு, குருவண்டு, நாபி வகைக்குக் கழஞ்சு சேர்த்து எலுமிச்சம்பழச்சாற்றால் அறைத்து, மயினமாகத் திரண்டுவரும்வரை அறைத்து எடுத்துப் புடம்போட வேண்டும்.

முப்பொருளான, மூன்று உப்பு குறிப்பிட்டபடி வகைக்கு ஒரு பலமாக, மூன்று பலம் எடுத்துக் கொண்டு முதலில் சுன்னமாக நீற்றிக் கொள்ளல் வேண்டும்.

(1 பலம்=35 Grams)

கிரியாதந்திரம்: முப்பொருள், மூன்று உப்பு, பெயர்களைக் குறிப்பிடப்பட்டுள்ளது. இந்த மூன்று உப்பும் காரசார உவர் கலந்த நீர்தான் உப்பாக்கி எடுத்துக் கொள்ளப்பட்டதாகும். "வருண" பூத அம்சமாக கடல் நீரை உப்பாக்கி, மூன்றில் ஒரு உப்பாக எடுத்துக் கொள்ளப்பட்டிருக்கிறது. இந்த உப்பு, தண்ணீரில் கரைந்து விடும். நெருப்பில், வெடித்து சிதறிவிடும். அப்படியிருக்க எப்படி சுன்னமாக்க முடியும்? அதற்கு சித்த ரசாயன தந்திரகிரியை கற்றறிந்திருக்க வேண்டும். இதுவும் முன் நூல்களில் கூறப்பட்டுள்ளது. கடல் நீருப்பை, தண்ணீரில் கரையாமலும், நெருப்பில்



வெடித்துப் போகமலும் இருக்கும்படி, கட்டு, கட்டி வைத்துக் கொள்ளல் வேண்டும். இது முப்பு சேர்க்கைக்கு முன் சித்தப்படுத்திக்கொள்ள வேண்டிய திட்டமாகும்.

பின்னர் நிலவுப்பு பேருக்குத் தகுந்தாற்போல் இந்த உப்பில் சில வகைகளுண்டு. உவர் நிலம், சவுட்டு நிலம், களர்காடு, வண்ணான் வாரியெடுக்கும் நிலவுப்பு. வள்ளுவர் குருவான சித்தர்கோன் நூலில் நில உப்பு எடுக்கும் விதம் கூறப்பட்டுள்ளது. இத்தகையவைகளில் ஒன்றான உவர் நிலவுப்பு எடுத்துக் கொள்ளத்தகும்.

'வன்னி' உப்பான வெடியுப்பு. இதற்கு பற்றி எரிந்து போகும் தன்மையானது. நீரிலும் கரையும் தன்மையுடையது. இதை எப்படி சுன்னமாக்க சேர்ப்பது என்கிற கட்டம் திகைப்பைக் கொடுக்கும். சித்தர் ரசாயன தந்திர விதிப்படி, இந்த உப்பை நெருப்புக்குப் பற்றி எரிந்து போகாமலும், நீரில் கரையாமல், கட்டு கட்டி எடுத்துக் கொள்ளல் வேண்டும்.

இப்படி, அனலுக்கும், நீருக்கும் அசையாத ஓடாத நிலை தயாரித்த பின்னர், திட்டப்படி மூன்று வித உப்பு களை எடை கற்ப விதிப்படி கல்வத்தில் சேர்த்து இணைத்து அறைத்துச் சுன்னமாக்கி எடுத்துக் கொள்ளல்.

வள்ளுவர் முப்பு பாகத்தின் சிறந்த அம்சம் மூன்று பூத உப்பு, முப்பொருளாய், சேர்ந்த முப்பு தயாரிப்பு. இது கல்ப முப்பு உன்னத தயாரிப்பாகும். இதைக் குறிப்பிட்டு வள்ளுவர் குறள் பாவில்

"மிகினும் குறையினும் நோய் செய்யும் நூலோர்
வளி முதலா எண்ணிய மூன்று."

மனித உடலுக்கு, நோய் உற்பத்திக்குக் காரணமான [illegible] பூதங்களின் ஏற்றத்தாழ்வு என்கிற சித்த மருத்துவ விதிப்படி 3 பூத உப்பை முக்கியமாய் எடுத்து செய்ய

செய்து குழிக்கல்லிட்டு, வீரம், பூரம், புழுகு, குருவண்டு, நாபி முதலியன வகைக்கு ஒரு கழஞ்சு சேர்த்து, எலுமிச்சம் பழச்சாற்றால் மர்தனை அறைப்பு செய்தல் வேண்டும்.

324. நன்றாய் அறைக்க, அறைக்க மயின பக்குவத்தை யடைந்துவிடும். இத்தகைய, வாயு, வன்னி, வருணன் பூத அம்ச உப்பு கூடினால், தேய்ந்து உலோகத்துடன் கலப்பினால் பொன்னிறம் உண்டாகி விடும். இந்தவித முப்பு பாய்ந்த வேகம் பகிரண்டத்தில் அளவுகடந்து பரவும்.

ஆ. குறிப்பு: மேலே கூறிய செய்யுள்களிலிருந்து முப்பு கூட்டு முறைகளில், உன்னத ரசாயன பொருள்களின் இணைப்பு, பூதவகை முப்பொருள், முப்புவாகி சேர்க்கை தயாரிப்பு தெளிவாய் கூறப்பட்டுள்ளது கவனத்திற்குரியது. ஆராய்ச்சிக்குகந்தது. அதாவது மூன்று பூதங்களான வாயு, வன்னி, வருணன் என்கிற அடிப்படையில் முப்பொருளாக. நிலவுப்பு, வெடியுப்பு, கடல் நீருப்பு முப்பு எடுத்துக்கொள்ளப் பட்டுள்ளது. இந்தவித மூன்று உப்பையும் சேர்த்து முதலில் சுன்னமாக்கிக் கொள்ளல்வேண்டும். அந்த சுன்னத்துக்கு செய்முறை 323 செய்யுள்படி கண்டுகொள்ளவும்.

பூருவத்தி லுதித்தகடல் கல்லுப்பாகும்
 பூநீரினுப்பதுவு மமுரியுப்பும்
வாரறிந்த முப்பொருளு வின்றுயுப்பாகும்
 வகைவகைபல மதுவாய் வகுத்துப்பின்பு
சருகாமல் பறங்கிவைப்பு பலந்தான் சூடன்றனை
 யெடுத்துக் குழிக்கல்லில் சமையத்தானும்
கருதாமல்வெண் கருவாலிரண்டு சாமம்
 கணக்காக மையதுபோல் கருதிடரே. 325
—ஞா. வெ. ப. 140 செய். 977



கட்டளைக் கலிப்பா

கருதியும் வழித்தே யெடுப்பில்லைகாண்
 கதிரவன்தனில் காய்ந்தெடு வட்டிலில்
சுருதிமேல் முடியொன்று புடமதில்
 துரிதமாய் கனலாறி யெடுத்திடும்
குருமுனியருள் திருவள்ளுவனுரை கூறிடும்
 பெரியோர்கள் மகத்துக்கள்
தொழுவது கலைப்பதம் பணிந்தர்ச்சனை
 தொழுதலால் பணிந்தாண்டே யுணருவார். 326
—செ. 978

325. முப்பு: கல்லுப்பு, பூநீருப்பு, அமுரியுப்பு, என்று அறியப்பட்ட, மூன்று பொருள் ஈன்றளித்த மூன்று உப்புகள். வகைக்கு பலமதாக அல்லது 35 Grams, தனித்தனி நிறுத்தெடுத்து, அத்துடன் பலன் சூடன் சேர்த்து வெள்ளை கருவால் இரண்டு ஜாமம், கணக்காய் மைபோலறைத்துக் கொள்ள.

326. அதையெடுத்து பில்லை தட்டி, சூரியன் வெப்பத்தில் காயவைத்து, மண் அகலில் வைத்து, அகல் மூடி சீலைமண் செய்துலர்த்தி புடமிட்டெடுக்கலாகும். இதை குருமுனியாகிய சித்தர் அகத்தியர்தமருளினால் திரு வள்ளுவர் கூறிய வசனங்களாகும். இத்தகைய விஞ்ஞான ரசாயன கலைப்பதம் பணிந்து அர்ச்சித்து தொழுத பேர்கள், பெரியோர்கள் அருளிய மகத்துக்களை உணரும் நிலையை அடைவார்கள்.

வி. வி.: பூநீருப்பு, பூநீர் எடுத்து கரைத்து காய்ச்சி எடுத்த உப்பாகும். 2. அமுரியுப்பு என்பது கடல் நீருப்பு 3. கல்லுப்பு என்கிற பதம் இங்கு எடுத்துக்கொண்டிருப்பது "பூருவத்திலுதித்த கடல் கல்லுப்பாகும்" என்றிருப்பதால், பூமியில் கல் ஆக உருவடுத்த, கல் உப்பு வகையை சார்ந்தது. முப்புவுக்கு

மெழுகு பதமாய் எடுத்து, துட்டிடை, அகல, சதுர பில்லைகளாகச் செய்து, வெய்யிலில் காயவைத்து எடுத்துக்கொள்ள வேண்டியது. பின்னர், மண்வட்டிலில் காய்ந்த வில்லைகளை வைத்துப் பந்தனம் செய்ய வேண்டியது.

322. அகலில் வைத்து அகல்மூடி சீலைமண் ஏழு செய்து உலர்த்திப் புடம் போட்டெடுத்து, ஊதி எடுத்துக் கொள்ள வேண்டியது. இதை பனிநீர்பட வைக்க வேண்டியது.

ஆ. வி. : திருவள்ளுவ சித்தரின் முப்பு செய்முறை களில் இது ஒன்று. பல சித்தர்கள் நூல் முப்பு பாகங்கள் ஆராய்ந்து, தனக்கனுபவமான முறைகளைக் கூறப்பட் டிருக்கிறது. இவரது "ஞானவெட்டி 1500" நூல் ஆரம்பத்திலேயே தனக்கு ஆதாரமான சித்தர் மரபு மறைவழி கூறப்பட்டுள்ளது. அகத்தியர் நூல்கள், புலத்தியர், போகர், கருவூரர் நொண்டி முதலிய சித்தர் மரபு வழிமுறைகளின்படி தனது அனுபவமுமாகும் என்பதை உணரலாம்.

ஆ. வி.: இராமேசுவரம், இராமனுதபுரம் கடல் ஓரங்களில், முத்து எடுக்கும் தொழில் இன ஜாதியினத் தவருக்கு சோனகர் என்று பெயர். இவர்களுக்கு சமுத்திரத்தின் அடியில் தங்கிய முத்துச்சிப்பி விளைச்சல் நன்கு தெரியும். மூழ்கி முடித்துச் சிப்பிகள் எடுக்கும் பொழுது உப்புப் பாறைகள் இருப்பதும் அவர்களுக்கு நன்கு தெரியும். இது விசேஷத்தன்மை வாய்ந்த கல்லுப்பாக எடுத்துக்கொள்ளப்பட்டிருக்கிறது. இதை ஆனைக்கல்லுப்பு எனவும் வழங்கப்படுகிறது. கடல் நீரில் சுண்ணாம்புக்கல் போட்டு யிடித்து எடுத்த தெளிவு ஜெயநீரில், காட்டில் பூர்க்கும் பூநீர் போட்டுக் காய்ச்சி உப்பெடுக்கவேண்டும். சமுத்திர ஜலம் 4 படிக்கு 1 படி சுண்ணாம்புக்கல் போட்டு இடித்துக் கரைத்து இறுத்துக்



கொள்ளப்பட்ட செயநீராகும். பூநீர் தகுந்த அளவு போட்டுக் கரைத்து, காய்ச்சி உப்பாக்கி எடுத்துக் கொள்ள வேண்டியது.

முன் சொல்லப்பட்ட சோனகர் கல்லுப்பு, பூநீர் அருள் மேவிய சுண்ணாம்புக்கல் கடல்நீர் உப்பும் கலந்து மூன்றுவித உப்புச் சேர்க்கை இதை வெண் கருவு விட்டு, குழிக்கல்லில் மெழுகு பதமாக்கி, பில்லை களாகச் செய்து உலர்த்தி, அகலில் வைத்து ஏழுசீலை செய்து புடம், ஊதி எடுக்க.

## முப்பூ

### விருத்தம்

முப்பொருளாய் நின்றிலங்கு மதியேவிந்து
முறையான நிலவுப்பு கடல்நீருப்பு
இப்பொருளாய் சமைத்தவித சுன்னம்வாங்கி
யிசைந்த குழிக்கல்லதனில் நன்ருயூட்டி
கைப்பொருளென் றிதையறிந்து வீரம்பூரம்
கருவினிலும் புழுகுகுருவண்டு நாபி
செப்பதிவகைக்கு ஒருகழஞ்சி கூட்டிசிதை
யச்சம்பழத்திட சாத்தால் மாய்ந்தே. 323

—ஞா. வெ. 988

மாய மாய மயன மதாகிடும்
வாய்வு வன்னி வருணனுங் கூடிடில்
தேய தேய செம்பொன்னிற மாயிடும்
பாய பாய பகிரண்ட மளாவியே. 324

323. சித்தர் திருவள்ளுவ நாயனுர் முப்பூ பாகங் களில் இது ஒன்று. முப்பு என்பது மூன்று பொருள் சேர்ந்தது. அந்த முப்பொருள் விவரம். மதி என்கிற வெடியுப்பு, நிலவுப்பு, கடல் நீருப்பு. இவ்விதமான முப்பொருள் சேர்ந்து ரசாயன தயாரிப்பு சுன்னம்

## முப்பு

316. பூலோகத்து மனிதர்களில் ஆனைக்கல் யாரறிவார்கள். சோனகரால் கண்டுபிடித்தெடுக்கப்படும் சொர்ண உப்பாகும். யானைக்கல் மூலம், காரசார அமுரியாக்குவதற்காக, பாண்டத்தில் கடல்நீரை விட்டு அதில் போட்டுவைக்க.

317. அதை யிடித்துக் கரைத்து எடுத்த தெளிவு நீர் நாலுபடிக்கு, ஒருபடி ஆனைக்கல்லும், காட்டில் விளையும் சவுட்டுப் பூநீரும், சேர்ந்து கரைத்து, ஊறவைத்துக் கொள்ளவேண்டியது.

318. அருள்மேவிய கல்லு, ஆனைக்கல்லுப்பு, ஆதியுப்பு மேலே கூறிய அமுரி காரசார ஜெயநீரில் போட்டு, அடுப்பில் வைத்துக் காய்ச்சி, நீர் சுண்டிப் போகும்படியாய்க் காய்ச்சி, உப்பாகி இறுகிவரும் பதங் கண்டு எடுத்து, சுத்த சலம்விட்டு அலம்பி எடுத்துக் கொள்ள.

319. சமுத்திர மத்தியில், ஓரப்பகுதிகளில் மலைப் பாறைகள் உண்டு. சமுத்திர உப்புத் தண்ணீர் அலை வேகத்தால், சூரியனது வெப்பக்கனல் கதிர் தாக்குதல், காரணமாய் பாறைகளில் உப்பு உறைந்து, சில வருடங்கள் உப்புக்கல்லாகி உறைந்துவிடுகிறது. இப்படி யாக கல்லில் உறையப்பட்ட உப்புக்கல்கள் சமுத்திரத்தில் சோனகர் என கூறப்படும், முத்துக்குளித்து எடுக்கும் பிரிவு தொழில் இனத்தவர்களுக்குக் கண்டு எடுக்கும் வாய்ப்பு உண்டு. சோனகர் கூட்டத்தார்கள் இந்தவித கல் உப்பை விற்பனைக்கும் விற்பார்கள்.

320, 321. இந்த உப்பானது, நெருப்புக்கு ஓடாது, நீருக்கு கரையாத கல்லுப்பாகும். இத்தகைய கல்லுப்பு, முன் தயாரித்த இருவித உப்பையும் குழிக்கல்லில் சேர்த்து வெண் கருவால், ஒருநாள் பூராவும் அரைத்து

கள்ளாகி ஆவியாக்கப்பட்டு வெளுக்க வைப்பதையும் நன்கு அறிதல் வேண்டும்.

ஆ.வி. விரிவுரை : சித்த மருத்துவக்கலை விஞ்ஞானத்தில் சிறந்த ரசாயன வகை "காரசார" உறங்களில் "பூநீர்" என்கிற பூமியின் சார உற்பத்தி தலைசிறந்த ரசாயனப் பொருளாகும். இதன் உற்பத்திக் கிரமம், சேகரிப்பது, உபயோகப்படுத்துவது முதலிய சித்த ரசாயன தந்திரக் கிரியைகள் நன்கு உணர்தல் வேண்டும்.

239. வண்ணான் கருத்து இன்னது என்பதை அறிந்து உணரல்வேண்டும். விண்ணுப்பால் காலனையும் வென்று விடுவீர்கள். உவர் சுத்தி செய்து உபயோகித்தலால் உடம்பு பொன் சாயலாய் விளங்கும். இதிலிருந்து கோடிக் கணக்கில் உபயோகப்படும் வழிகளுண்டு.

விஞ்ஞான விளக்கம்: முன் செய்யுளில் சொன்ன பொருள்படி வண்ணான் துணிகளை வெளுப்பதற்காக உவர்நீரினுல் பூர்த்த பூநீரை வாரி, வேகவைத்து வெள்ளாவியின் சம்பந்த கிரியை, சரிகைகளால் பயன் படுத்துகிறுன். இதனுல் துணிகளில் படிந்திருக்கும் அழுக்கு, கசடுகள், நீங்கப் பெற்று சுத்த வெண்மை நிறமான, சுத்தமான துணியாய் ஆய்விடுகிறது. துணிகளில் அன்ருட வாழ்க்கையில் பல விதமான கசடுகள், பல பிணிகளைப் பரப்பும் மலினங்களும் ஒட்டிக் கொள்ள அனேக சந்தர்ப்ப சூழ்நிலைகள் இருந்து வருகிறது. அந்த தோடங்கள், குற்ற மலினங்கள் யாவும், வண்ணான் வாரியெடுக்கும் பூநீரின் ஆவி, இவைகளினுல் சுத்தமாக்கப்படுகிறது. அந்தக் கருத்தை உணர்ந்து பயன் படுத்தி, வண்ணான் பயன்படுத்தும் உவர் பூநீரை வாரி எடுத்து, சுத்தி செய்து, தோடங்கள், கலந்திருக்கும் நீங்கும் கிரியைகளை செய்து, உப்பாக்கி விண்ணுப்பாய் பதம் செய்யப்பட்டு, மனித சரீரத்திற்கு உகந்த வகையில்

**சித்தர் ரசாயன விஞ்ஞானம்:** காவேரி முதலிய கங்கைநதி தண்ணீர், பூமியின் சம்பந்த ரசாயன உரசத்துக்கள் ஆங்காங்கு மலை, மரம் செடி வகையறுக்கள், பற்பல இடங்களிலிருந்து மழை ஜலத்தால் அடித்துக்கொண்டு வரும் வண்டல்மண், சீதோஷ்ண வெப்புக் கலப்புகளால் ஒரு விதமான காரசார சத்துகள் கலப்பால், தண்ணீர் மிகவும் ரசாயன கலப்பினமாகி, தெய்வீக சீவத்தன்மை பெற்று, பிரவாகத்தில் ஓடும் சலன, சப்த ஒலியுடன் இணைந்து பிரவாகமாக ஓடி வருகிறது. அப்படி வரும் கங்கை, காவேரியின் காரசார பூமி உர சம்பந்த தண்ணீர், பற்பல கிளை நதிகள், கால்வாய்கள், பெரிதும், சிறிதுமாகப் பிரிக்கப்பட்டு நிலங்களில் சேர்க்கப்பட்டு, உண்ணும், சீவாதார, ஆகாராதி உணவு தானியங்களையும், மூலிகை, மரம், செடி, கொடி வகைகளையும் செழிப்பாக உற்பத்தியாகி, உலக சீவ கோடிகளுக்கு, பிராணதாரமாகப் பரிணமிக்கிறது. இந்த காரசார உறசத்தால், நிலங்களுக்கு உறம் போடாமலே செழித்துப் பயிர்கள், விளைச்சல், பலிதங்கள் கொடுப்பதுடன், வருடத்திற்கு 3 போகம் பயிர் விளைச்சலையும் உண்டுபண்ணி விடுகிறது. சித்தர் மதாந்தர ரசாயன விதிப்படி, இத்தகைய பூமி ரசாயன சத்துக்களைப் பொதுவாக, எல்லா வகைகளுக்கும், காரம், சாரம் என இரு வகையாக பிரித்தும், வஸ்து ரசாயன இன சரக்குகளுக்குத் தகுந்தபடி, உப்பு, புளி இனங்கள், ஆண், பெண் இனமாக, தகுதிக்குத் தக்கபடி, சித்தர் ரசாயன விஞ்ஞான விதி அமைத்திருக்கிறார்கள்.

237. உப்புக் கலந்த உவர்மண், புளி, உறம் கலப்பினால் தான் சகலவிதமான கடைகளில் விற்கும் பண்டங்களும் கிடைக்கப்பெற்று நாம் உபயோகிக்கிறோம். நமக்கு கிடைக்கும் சகல மூலிகைகளிலும், சவுடு கலந்துதான் இருக்கிறது. காரசார இனமாகிய, உவர், உப்பு கலப்பு



சம்பந்தமில்லாத பண்டங்கள் அவ்வளவும், தீதானவைகள். உபயோகிக்க தகுதிப்படாது.

**ஆசிரியர் அனுபவ விளக்கம்:** உப்பில்லாத பண்டம் பாழ் என்பது உலக மக்கள் வழங்கிவரும் பொது விதி. உலக மக்கள் சாதாரணமாய் அனுபவித்து வரும், அன்றாட பழக்க வழக்க ஆகாராதிப் பண்டங்களில், கலந்தே நித்யப்படி உபயோகிக்கும், நிரந்தர வஸ்துவாகும். உப்பு கலப்பில்லாமல் செய்யும் வஸ்துக்கள் சீக்கிரத்தில் கெட்டுப்போவதுடன் ருசியும் யில்லாமல் குறைபட்ட, சீவாதாரத் தன்மையையும், செழித்து நிலைக்கும் தன்மையையும் குறைத்து விடுகிறது. இந்த ஆதார உப்பு, தண்ணீரும், உவர்மண் கலப்பினால், சித்தர் ரசாயன விதிப்படி, உப்பு கலப்பான தண்ணீரும், புளி கலப்பான உவர்மண், கார, சாரப் பிரிவு சத்தினங்களின்படி ஆண், பெண் இனக்கலப்பில் உப்பு எனும் பிராணதார வஸ்துவை உற்பத்தி யாக்கப்பட்டிருக்கிறது. இந்த விகிதாசார ஏற்றத்தாழ்வான கலப்பினால், சகல மூலிகைகளும், எல்லாவித ஆகாராதி, கடைச்சரக்குகள் உற்பத்தியாகி உலக மக்களால் அனுபவித்து வரப்படுகிறது. பூமியில் உப்பு உவர்மண் கலப்பின் காரசாரத்தின் உறங்களால்தான், ஆகாராதி சகல பயிர், மூலிகை, பண்டங்கள் யாவும் வளர்ச்சியடைந்து வருகிறது என்பது உலக சிருட்டி இயல்பு என்பதையும் உணர்தற்குரியது.

238. இந்த அத்தியாயம் வள்ளுவர் அளித்த ரசாயன விஞ்ஞானக்கலை பற்றியது. 'பூநீர்' என்பது சித்தர் ரசாயன "காரசார", நீர் வகைகளில் ஒன்று. காரசார ரசாயன வகை நீர், பூமியின் உறம் சம்பந்தத்தால் பூரிக்கிறது. இந்த வகைகளில் "வண்ணான்" உபயோகிக்கும் பூநீர் பூமியில் உற்பத்தியாகும் விதத்தை அறிந்துகொள்வது அவசியம். அதை வெள்ளாவியுண்டாக்கித் துணிகளை வெளுக்க வைப்பதும், பூநீர்

வெள்ளாவியாற் காரங்களை வெளுக்க வேண்டுமெனல்

நேரிசை வெண்பா

புவிதனிலும் வண்ணான் பூநீர்ப் பிறப்பறிந்து
செவிதனிலுமே யுறைத்தச் செய்திகேள்—புவிதனிலும்
வெள்ளாவிசீலை வெளுக்கும் விதமறிவீர்
கள்ளாவியாற் வெளுப்பீர் காண். 238

—செ. 485

உடல்சுத்தியாகு லுவற்சுத்தியா மெனல்

கண்டறிவீர் வண்ணான் கருத்தை யறிந்துணர
வென்றிடுவீர்காலனையும் விண்ணுப்பாற்—கண்டறிவீர்
வுவற்சுத்திசெய்து முன்னுடம்பு பொன்னிறமாங்
கவரிவையிற் கோடி கவர்காண். 239

—செ. 486

பூநீர் குறியறிய (கலிநிலத்துறை சந்தப்பா)

சரியபாலடைச் சங்கதின் வெண்ணிறமதுபோற்
பிரியும்நீரதும் பின்பெடுத்தவைகுறி பேசு
மரியுந்தேயுவின் வெடிலவணப்பதம் வருமாய்
முரியுமெண்ணெய்போன் றிடுதற்பூநீரெனு மியல்பே. 240

—செ. 491

236. பூலோகத்தில், தண்ணீர் தெய்வீக கங்கைப் புனலுருவில் தாயாராகி, ஈரேழு உலகத்திலும் பிறந்து உடலெடுத்து, புலன்கள், ஐம்பொறி, ஐம்பூதங்கள் கலந்து உறவாடும் எண்ஜாண் உடலுமாகி, மனிதகுலம் தழைக்கக் காரணமாகி, குடிகொண்டு செயல் புரியும் தன்மை வாய்ந்தது.

ஆ.வி.வி.: உதாரணமாக நமது தென்னாட்டில் தஞ்சை மாவட்டத்தில் காவேரி நதி பல கால்வாய்கள்



கிளைநதி, வாய்க்கால்களாகி, வயல் நிலங்கள், பயிர்கள், குளங்கள் முதலானவைகளுக்குத் தண்ணீர் கொணரப் பட்டு, மாவட்டப் பொதுஜனங்களுக்கு, உயிர்ப்பசை தழைக்க, காரண ஆதாரமாகி வழங்கி வருகிறது. மேலும் தஞ்சை மாவட்டம், காவேரி நீர்ப் பாய்ச்சல் ஆதிக்கம் பெற்ற இடங்களிலெல்லாம், காவேரி நதிக்கரை, கோவில்கள் முதலியவற்றில், காவேரி அம்மையார், காவேரித் தாயார், கல்சிலை வடிவில், சகல தெய்வீக மரியாதை, தூபதீப நமஸ்காரத்தோடு வழிபட்டு வருகிறார்கள். நாள்தோறும், போகுமிடங்களிலும், குடிக்கும் தண்ணீர், உண்ணும் ஆகாரம், தானிய விளைச்சல், தொட்ட இடமெல்லாம் காவேரி நீர் ஆதிக்கம் பெற்ற பொருட்களாகி, அதைக்கொண்டு உடல் ஊன் வளர்த்து, அன்னை தந்தையர்களாகி மக்களைப்பெற்ற ஜன சமூகம் தழைக்க, வாழ்க்கை நடத்த காரணமாய், தெய்வத்தன்மை பெற்ற காவேரித் தண்ணீராய் வழங்கி, ஜீவிக்க உதவி புரிகிறாள்.

சுருங்கச் சொல்லின், காவேரி நீர் தண்ணீரின் ஆதரவில் விளையும் நாடாகிய தஞ்சை மாவட்ட மாஜனங்கள் காவேரித் தாய்க்குத்தான் பிறந்தவர்கள் என்பதை நன்குணரலாம். சில சமயங்களில் தண்ணீரின் சிறப்புத்தன்மை, மக்கள் பேச்சுவார்த்தைகளில், காவேரித் தண்ணீர் வளம் பொருந்திய நாட்டில் பிறந்தவன். அதனால்தான் ரொம்ப கெட்டிக்காரன் என்று சொல்வதுண்டு. இவைகளெல்லாம் ஆராய்ச்சி செய்யுங்கால், தண்ணீர்தான் பிரதான வாழ்க்கை பிறவிக்குக் காரணமாகி, புலன், பொறி, பூதவர்க ஊன், உடல் வளர்க்க, தழைக்கக் காரணமாகி, செயல்புரிந்து வருவதும், தெய்வீகத் தன்மை வாய்ந்ததாய், உலகந் தழைக்கப் போஷித்து வருகிறாள் என்பது உணர்தற் குரியது.

# சித்தர் திருவள்ளுவர் அருளிய
# காரசார ரசாயன கற்பவிஞ்ஞானம்

## பூநீர்—உப்பு—முப்பு

பிரிவு–1

### பூநீர்

#### பொறி பூதம் ஜடம் யாவுக்குஞ் ஜலமே யாதாரமெனல்

ஜலமானகங்கை யன்னைமயத்திற் றுனுதித்து
பிலமாயகில மீரேழும்வாழ்கப் பிறந்ததுநாட்
புலன்பொறியாகி யெண்ஜாண் ஜடமும் பூதமைந்தாய்க்
குலங்குடிகொண்ட வுத்தியின் வாட்கை குவலயமே. 236

#### சர்வ மூலிகையிலுஞ் சவுடாகையால் உப்புப்புளி வுறப்பும் மியல்பாயியங்கல்

உப்பெனுமுவற் புளியுரப் பொருட்டிறுலுணரும்
விற்பனைக்கடை வீதியில்விலை பெருமியல்காண்
தப்பிதமிலா சர்வமூலிகையிலுஞ் சவுடாஞ்
செப்பெணுதுவ ருப்பிலாப் பண்டமுந்தீதே. 237

—செ. 534